

சைமன் கமிட்டியாரும், அவர்களுடன் வந்த லேடி ஸ்டிராத்னுவும்.

(421-ம் பக்கம் பார்க்க)

உ
ஓம்
பரப்பிரஹ்மணேநம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 13 } பிரபவஹு பங்குனிமீ கஉ } 1928ஹு மார்ச்சுமீ 13உ { பகுதி 9

## கடவுள் வணக்கம்.

எந்நாளு முடலிலே யுயிரா முனைப்போ
விருக்கவிலை யோமன தெனும்
இயானுமென் னட்பாம் பிராணனு மெமைச்சடம
தென்றுனைச் சித்தென்றுமே
அந்நாளி லெவனோ பிரித்தா னதைக் கேட்ட
வன்றுமுத லின்று வரையும்
அநியாய மாயெமை யடக்கிக் குறுக்கே
யடர்ந்தரசு பண்ணி யெங்கள்
முன்னாக நீயென்ன கோட்டைகொண் டாயென்று
மூடமன மிகவு மேச
மூண்டெரியு மனலிட்ட மெழுகா யுளங்கருகன்
முறைமையோ பதினாயிரஞ்
சொன்னாலு நின்னரு ளிரங்கவிலை யேயினிச்
சுகம்வருவ தெப்படி சொலாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே. (1)

ஏசற்ற வந்நிலையே யெந்தைபரி பூரணமாய்
மாசற்ற வானந்த வாரி வழங்கிடுமே
பூசற் சுழல்போ லுலகநெறி வாதனையாற்
பாசத்துட் செல்லாதே பல்காலும் பாழ்நெஞ்சே. (2)

பாழாகி யண்டப் பரப்பையெல்லாம் வாய்மடுத்து
மாழாழி யின்பத் தழுந்தப் படியாயோ
தாழாயோ வெந்தையருட் டாட்கீழ்நெஞ் சேயெனைப்போல்
வாழாது வாழ்ந்தழியா வண்ண மிருப்பாயே. (3)

# அரும்பொருள் விளக்கம்.

1. “சுத்த நிர்க்குணமாகிய மேலான தெய்வமே! உயர்ந்த ஒளிவடிவமானவனே! இன்பக்கடலே! (மனமானது என்னைநோக்கி), ‘எக்காலத்தும் உடம்பிற்குள் உயிராயிருக்கின்ற உன்னைப்போல் மனமென்கின்ற யானும், என் நண்பனாகிய பிராணனும், இருக்கவில்லையோ? அப்படியிருக்க, எங்களைச் சடமென்றும், உன்னைச் சித்தென்றும், அக்காலத்தில் எவனோ பிரித்து வைத்தான்; அதுமுதல் இதுவரைக்கும் எங்களை அடக்கி அரசாட்சி செய்து நீ எந்தக் கோட்டையைப் பிடித்தாய்?’ என்று எச, உன்னை யடையதலாகிய பயனை அடையாமலிருக்கும் நான் மனமுருகுகின்றேன்; இது முறையோ? நான் பதினாயிரந்தரம் இதை விண்ணப்பஞ் செய்துகொண்டாலும் உன் திருவருள் இரங்கவில்லையே; இனி எனக் கின்பமுண்டாவதெப்படி? நீ கூறுவாயாக” என்பது இதன்கருத்து.

மனம், பிராணன் முதலியன சடப்பொருள்களென்றும், சீவனாகிய தம்மைச் சித்துப்பொருளென்றும் வேறுபிரித்து, மனம் முதலியவற்றை அடக்கி, அவற்றாற் பயனில்லையென்றும், அனாதியே பதியொன்றுண்டென்றும், அதனை யடைதற்கு, அனாதியே தம்மைச் சார்ந்துள்ள பாசத்தை நீக்கிக்கொள்ள வேண்டுமென்றும், அங்ஙனம் நீக்கிக்கொள்ளத்தக்க சாதனங்களின்னவையென்றுந் தெரிந்து அந்நெறியில் முயன்ற சுவாமிகள், குறித்தவாறே பதியை அடையக் காலம் நீட்டித்ததால், இங்ஙனம் தம்முடைய நிலையைக்கண்டு மனம் பரிகசிப்பதாகக்கூறி இறைவன்பால் முறையிடுகின்றனர். மனம் தம்மைப் பாசத்தின் வழியில் இழுக்கமுயல்வதை இங்ஙனம் பரிகசிப்பதாகக் கூறினார். உயிர்=சீவன்; ஜீவாத்மா. பிராணன்=பிராணவாயு; சுவாசம்; சீவன் உடலில் நிலைத்திருப்பதற் கனுகூலமா யிருப்பது. சடம்=அறிவற்றஅல்லது நிலையற்ற பொருள். சித்து=அறிவுமயமான பொருள். அடர்ந்து=நெருங்கி.

2. “மனமே! எந்தையாகிய இறைவன், அடியார்க்கு மௌனநிலையிலேயே சிவானந்தப் பெருக்கைத் தந்தருளுவான். (பாசத்துட்சிக்கி யுழல்வார்க்கு அருளமாட்டான்). ஆகலின், ஊஞ்சல்போல் நிலையற்று ஆடுகின்ற பிரபஞ்ச அனுபவவிருப்பத்தால் பாசத்திற் புகாதே” என்பது இதன்கருத்து.

இதில், பிரபஞ்சமயக்கத்திற் புகாமல் மௌனநிலையி லிருப்பார்க்கே கடவுள் பேரானந்தநிலையை அருளுவார்; ஆதலின், நீயும் பாசத்திற் புகாது மௌனநிலை யடைந்து பேரானந்தத்தை அடைவாயாக என்று சுவாமிகள் தம் மனத்திற்குக் கூறுகின்றனர். எச=குற்றம். மாசு=குற்றம். வாரி=சமுத்திரம்.

3. ‘மனமே! நீ (தொழிலற்று) நசித்து, உலகமெல்லாவற்றையும் உண்டு (அதாவது உலக நினைவு சிறிதுமின்றி), ஆழ்ந்த சிவானந்தக்கடலில் அழுந்தும்படி மூழ்காயோ; கடவுளின் திருவருள் பொருந்திய திருவடியின்கீழ் வணங்கமாட்டாயோ; (அவ்வாறு மூழ்கி வணங்கினால்) என்னைப்போல நித்தியவாழ்வில் வாழ்ந்து என்று மழியாதபடியிருப்பாய்” என்பது இதன்கருத்து. இறைவனடிக் கீழ்ச் சாதலாகிய முத்திநிலையை யுணர்ந்த சுவாமிகள், தாம் அதனை யடைந்ததாகவே உறுதிகொண்டு, முத்திமார்க்கத்துக் கிடையூறாக அலையும் மனத்தைநோக்கி, இவ்வாறு, ‘நீ சிவானந்தத்தால் மூழ்கி அவனடியை வணங்கினால் என்னைப்போல் அழியாத சுகநிலையை அடைவாய்’ என்று கூறினார்கள்.

உலகத்தை உண்ணுதலாவது—அதன் நினைவு சிறிதுந் தோன்றாதபடி அதனை உள்ளே அடக்கிவிடுதலாம்.

வாய் மடுத்தல்=வாயால் உட்கொள்ளல். படிதல்=மூழ்கல். *




## தமிழ்க் குற்றங் களைதல்.

ஒவ்வொரு தேசமும் சிறப்படைவதற்கு அந்த அந்த நாடுகளில் வழங்கிவரும் மொழியே முக்கிய கருவியாம். ஆதலின், ஒவ்வொரு நாட்டினரும் தம்தம் மொழிகளை நல்லவிதத்தில் வளர்க்கக் கடன்மைப்பட் டிருக்கிறார்கள். அங்ஙனம் சொந்த மொழியைப் போற்றும் நாடுகளே இக்காலத்தில் மேம்பாடுற்று விளங்குகின்றன. ஐரோப்பா, அமெரிக்கா முதலிய நாடுகளில் சுயமொழி வளர்ச்சிக்குரிய காரியங்கள் மிகுதியும் செய்யப்பட்டு வருகின்றன. அவர்களால் அச்சிடப்படும் புத்தகங்களிலோ, துண்டுப் பிரசுரங்களிலோ பிழைகள் நேராதபடி மிக்க கவனத்துடன் வேலைகள் நடத்தப்படுகின்றன. வெளியீடுகள் ஒவ்வொன்றும் கல்வியறிவுடையவர்களால் நன்கு பார்வையிடப்படுகின்றன. கையெழுத்தால் வெளிவருவனவும் கல்விமான்களாலேயே பிழையற எழுதப்படுகின்றன. முஸ்லிம்களுக்குள் அரபு மொழியானது மிகுந்த இலக்கணக் கட்டுப்பாட்டுடன் அமைந்திருக்கின்றது. அதனைப் படிப்பவர்களும் பிழையின்றிச் சுத்தமாகப் படிக்கிறார்கள்; எழுதுகிறவர்களும் ஓர் எழுத்தேனும் மாறுபட்டுவிடாமல் மிக்க கவனத்துடன் எழுதுகிறார்கள். அச்சிடுகிறவர்களும், ஒரு முற்றுப்புள்ளி கூட விடாமல் நல்லவிதத்தில் அச்சிட்டு வெளியிடுகிறார்கள். இங்ஙனம் இவர்கள் செய்து வருவதனால், இவர்களுடைய மொழிகள் சிறப்படைவதோடு இவர்களுடைய நாடுகளும் கீர்த்தியடைகின்றன; இவர்களும் புகழ்ச்சிக்குரியவராகின்றார்கள்.

புறநாட்டு மொழிகளின் வளர்ச்சியும், சிறப்பும் இங்ஙனமிருந்தும், எல்லாமொழிகளினும் இனிமையும், தலைமையும், இலக்கண

வரம்பும் பெற்று விளங்கிவந்த நம் செந்தமிழின்நிலை, கற்றூர் மனம் பெரிதும் புண்படக்கூடியதாக இருந்துவருகின்றது. அச்சுச் சாதனங்கள் இல்லாமலிருந்த பண்டைக்காலத்திலாவது தமிழ் மொழியானது மிகுந்த பிழைகளுக்குள்ளாகாம லிருந்து வந்தது. அப்போது மொழியைக் கையால் சுவடியில் எழுதும் வழக்கமே யிருந்தபடியால் சிலரே நூல்களை எழுதிவைக்கக்கூடியவர்களா யிருந்தார்கள். அவர்களுட் பெரும்பான்மையோர் பிழையின்றியே எழுதிவைத்து வந்தார்கள். சிறுபான்மையோர் பிழையுடன் எழுதக்கூடியவர்களா யிருந்தாலும் அக்கையெழுத்துப் பிரதிகள் அதிகமாகப் பரவ ஏதுவில்லாமலிருந்தது. அதனல் பிழைபட்ட தமிழ் எங்கும் பரவாமலிருந்தது. கற்றோரால் எழுதப்பட்ட நற்றமிழே பெரும்பான்மையோரால் படிக்கபபட்டுவந்தது. செய்யுளாலும், நடையாலும் அமைந்த நூல்கள் பெரும்பான்மையும் பிழையற்றன வாகவே யிருந்துவந்தன. படிப்பில் குறைந்தவர்களும் ஏதேனு மெழுதினல் அதை, கல்வியிற் பெரியாராகிய புலவரிடத்தில் காட்டிப் பிழைகளைந்து வெளியிட்டு வந்தார்கள். பிழை களைதற் பொருட்டே அக்காலத்தில், பலராலும் இயற்றப்பட்ட நூல்களை அவரவர்களும் பல புலவர் கூடும் சபைகளில் அரங்கேற்றி அவர்களிடம் தகவுரைச் செய்யுட்கள் வாங்கி வெளியிடும் வழக்கம் ஏற்பட்டிருந்தது. இராஜசமுகத்திலும் காட்டி வெளியிடும் வழக்கமும் உண்டாயிருந்தது.

இக்காலத்திலோ அத்தகைய வழக்கங்களெல்லாம் பெரும்பான்மையும் ஒழிந்துபோயின. மொழியைப்பற்றிய எந்த வெளியீடுகளையும் விரைவில் வெளியிட்டு எங்கும் பரப்பிவிடக்கூடிய அச்சுச்சாதனங்கள் மிகுதியும் உண்டாயிருக்கின்றன. அவற்றுல் கல்வியுள்ளார், இல்லார் ஆகிய எல்லோருமே எதையும் எளிதில் வெளியிட்டு வருகின்றூர்கள். இக்காலத்தில் முறைப்படி கல்வி கற்றூர் சிலரே; அவர்களால் மொழிவளர்ச்சிக்குச் செய்யப்பட்டுவரும் வேலைகளும் சிலவே. இத்தகைய கல்விமான்களால் பள்ளிக்கூடத்து மாணவர்களின் பாடமுறைக்காகவும், மற்றையர் படித்தற்பொருட்டும் வெளியிடப்பட்டுவரும் நூல் வெளியீடுகளும், பத்திரிகைகளும், துண்டு வெளியீடுகளும் பிழையற்றனவா யிருக்கின்றன. எனினும், எண்ணிக்கையில் மிகைப்பட்ட மனிதர்களையுடைய நம் தமிழ்நாட்டில், இத்தகைய கல்விமான்களின் கூட்டமும், இவர்

களின் பிழையற்ற வெளியீடுகளும் மிகக் குறைந்திருப்பதால், இவர்களும், இவர்களுடைய மொழி யுழைப்பு வேலைத்திறங்களும் இருக்கின்ற தன்மை மிகுதியும் விளங்கவேயில்லை. சமுத்திரத்தில் பெருங்காயம் கரைத்ததுபோன்றுளது. இலக்கணவரம்போடுகூடிய கல்வி கல்லாமல், பிழைபட்ட கல்விகற்றவர்களின் கூட்டமே எங்கும் மலிந்திருக்கின்றது. அவர்களுள் ஒரு பகுதியார் கல்வித்துறையிற் புகாமல், வியாபாரம் முதலிய வெவ்வேறு துறைகளுட் புகுந்து கடிதமெழுதுதல், கணக்கு வரைதல் முதலியவற்றைப் பிழைபட்ட தமிழில் செய்துவருகின்றார்கள். அவை அந்தப் பகுதியினர்க்குள்ளாகவே வழங்கிவருவதால் அப்பிழைகளைக் காண்பாரும் வெறுப்பாருமில்லை. அவை கல்வியறிவாளர் சிலருடைய கண்களிற்பட்ட போதுமாத்திரம் அவர்கள் தமிழின் எழில் கெட்டு நிற்பதைப் பற்றி வருந்துகிறார்கள். மற்றொரு பகுதியினரோ, தாங்கள் கல்வி நிரம்புதலில்லாதவர்களா யிருந்தும், பிழையின்றித் தமிழை எழுதும் ஆற்றலற்றவர்களாயிருந்தும், தங்களுடைய நிலைமையைச் சிறிதும் உணராமல், தங்களைத் தாங்களே நல்ல கல்வித்தேர்ச்சியுடையவர்களாக நினைத்துக்கொண்டு, செய்யுட்களிலும், நடையிலும் நூற்களை இயற்றி அச்சிட்டு வெளியிடுகின்றனர்; நூற்களுக்கு உரையெழுதியும் வெளிப்படுத்துகின்றனர்; பத்திரிகைகளும் நடத்துகின்றனர்; துண்டுப்பத்திரங்களையும் வெளியிடுகின்றனர். அவற்றில் மலிந்துகிடக்கும் பிழைகளோ எண்ணத் தொலையாதன:—செய்யுட்களோ யாப்பிலக்கணப் பொருத்தம் சிறிதுமின்றி எதுகை மோனை யின்றியும், பொருட் பொருத்தமின்றியும், வாக்கியத் தொடர்கள் ஒன்றுக்கொன்று சம்பந்தமின்றியும், ஒவ்வொரு வார்த்தைக்கும் அமையவேண்டிய எழுத்துக்கள் அமையாமலும் பைத்தியம் பிடித்தவன் உளறினவைகளைப் போன்றிருக்கின்றன; நடைகளோ எழுவாயின்றியும், அஃறிணை முடிபு வரவேண்டியவிடத்து உயர்திணை முடிபுவந்தும், உயர்திணை முடிபு வரவேண்டியவிடத்து அஃறிணை முடிபுவந்தும், செய்வினைமுடிபு செயப்பாட்டு வினையில் முடிந்தும், பொருள் விளங்காமலும் மதுவுண்டு வெறியேறியவன் பிதற்றியவைகளைப் போன்றிருக்கின்றன. சிலர், 'இது செய்யப் பட்டது' என்று செயப்படுபொருள் எழுவாயாக நின்று செயப்பாட்டு வினையில் முடியவேண்டியதை, 'இதைச் செய்யப்பட்டது' என்று செயப்படுபொருளில் இரண்டனுருபுவிரித்து, அதனை இரண்டாம் வேற்றுமை விரியாக்கிச் செயப்பாட்டு வினையோடு கூட்டி

முடிக்கின்றனர். இஃதாவது சற்று நுட்டமான இலக்கணசம்பந்தம்; எளிதான இடங்களிலும் அவர்கள் மிகுந்த பிழைகளைப் புகுத்தி யெழுதுகின்றனர். அன்னத்தை அண்ணமென்றும், கரும்பைக் கறுபபென்றும், ஆறு என்னும் எண்ணை ஆரு என்றும், அழுதான் என்பதை அளுதான் அல்லது அலுதான் என்றும், இலையென்பதை இளையென்றும், மறந்தான் என்பதை மாந்தான் என்றும், துரத்தினன் என்பதைத் துறத்தினன் என்றும், வாழையென்பதை வாளையென்றும், எண்ணெய் என்பதை என்னை என்றும் இன்னும் எண்ணத்தொலையாத பிழைகளாகவும் எழுதுகின்றனர். இப்படி எழுதிவிட்டுச் சிலர், 'இப்படிப் பிழையாக எழுதலாமா?' என்று கேட்டால் 'எழுத்துநடையில் சங்கதிதான் தெரியவேண்டும்; தமிழ் எப்படியிருந்தாலும் அதைப்பற்றிப் பாதகமில்லை' யென்று சமாதானங் கூறுகின்றனர். அது அதற்கு உரிய எழுத்துக்களுடனும் இலக்கணப்பொருத்தத்துடனும் அமைந்த வார்த்தைகளே தாங்கள் விளக்கவேண்டிய பொருள்களை ஐயமற விளக்கிக்காட்டுமென்பதையும், அவற்றில் ஓர் எழுத்துப் பிழைபட்டாலும் பொருள்வேறு பட்டுப்போமென்பதையும் இவர்கள் உணர்வதில்லை. 'தாம்' என்ற பதத்தில் தகரத்துக்குப் பதிலாக நகரம் வந்துவிடுமேயானால் அது, 'நாம்' என்று ஆகிப் பொருளைக்கெடுத்து எவ்வளவோ மயக்கத்தை உண்டாக்கிவிடுகிறது. இஃதிவர்களின் புத்தியிற் சிறிதும் படவில்லை. இந்த அபிப்பிராயம் இவர்களுடைய உள்ளத்திற் படிந்திருப்பதால் இவர்கள் வழுமயமாகத் தங்களால் எழுதப்படுகின்றவைகளைச் சிறந்த தமிழ்ப்புலவர்களிடம் காட்டித் திருத்திக்கொள்வதுமில்லை; அவர்களைக் கல்விமான்களென மதிப்பதுமில்லை. இப்படி இவர்கள் செய்துவருவதினாலும், மணிக்குப் பல்லாயிரக்கணக்கான காப்பிகளை அடித்துவிடக்கூடிய எந்திரங்கள் மலிந்து கிடப்பதாலும், இவர்களால் பிழைபட்ட தமிழே நாடோறும் அச்சிடப்பட்டு எங்கும் பரப்பப்பட்டு வருகின்றது; வழுமிகுந்த தமிழே வலிமிகுந்து மலிந்து வருகின்றது.

அந்தோ! இவ்வாறு தமிழின் எழில் கெட்டுவந்தும் இதிற் சிந்தை செலுத்துவாரெவருமில்லை. எழுத்துப்பிழை, இலக்கணப் பிழை முதலியன இல்லாமலாவது தமிழை வழங்கச் செய்வதில் முயல்வதை விடுத்துச் சில கல்விமான்கள் வேறு ஏதேதோ செய்து சண்டை சச்சரவுகளை யுண்டாக்கிக்கொண்டு தமிழ் மொழிக்கு

மிருதியும் பாடுபடுவதாகத் தற்பெருமைபேசி வருகின்றனர். சிலர், மேற்கூறிய பகுப்பினரால் தமிழுக்கு நேர்ந்துவரும் இழுக்குகளை எவ்விதத்திலும் நீக்குதல் முடியாதென்கின்றனர்.

இவையெல்லாம் பயன்தரும் கொள்கைகளும், அபிப்பிராயங்களுமல்ல. அறிஞர் முயன்றால், தமிழைப் பெரும்பாலாரும் பிழையின்றி யெழுதி வெளியிடுமாறு எளிதிற் செய்துவிடலாம். இப்பொழுது அச்சுக்காப்பிகளாலேயே வழுப்பட்ட தமிழ் வழங்கி வருவதால், அச்சுக்கூடத்தலைவர்கள் சில ஒழுங்குகளைக் கடைப்பிடித்து நடப்பார்களானால் தமிழ்க்குற்றத்தை எளிதாகக் களைந்துவிடலாம். எத்தனையோ தமிழ்ப்புலவர்கள் முறைப்படி கல்வி கற்றும் பிழைப்புக்கு வழியின்றிப் பெருமூச்சுவிட்டுக்கொண்டு திரிகின்றனர். இவர்களுள் ஒவ்வொருவரை ஒவ்வொரு அச்சுக்கூடத்தலைவரும் சம்பளத்துக்கு நியமித்துத் தங்கள் ஆபீசில் வெளியாகும் ஒவ்வொரு வெளியீட்டையும் பார்த்துக் குற்றங்களையும் படி செய்தல் வேண்டும்; இக்காலத்தில் சில அச்சுக்கூடத்தலைவர்கள், பிழைதிருத்தும் புலவர்க்குக் கூலி கொடுக்க வயிறெரிந்து அச்சுக் கோப்போர் பிழையாக அடுக்குகிறபடி வெளியீடுகளை அச்சிட்டுவரும் கெட்ட வழக்கத்தை அடியோடொழித்துவிடவேண்டும். வித்தியா இலாக்காத்தலைவர்களும் இவற்றைச் செய்யும்படி அச்சுக்கூடத்தலைவர்களை வற்புறுத்தவேண்டும். இவற்றைச் செய்தால், தமிழானது, குற்றங்களையப்பட்டு நல்ல இலக்கணப் பொருத்தத்தோடு ஏன் வெளிவரமாட்டாது? இத்தகைய ஏற்பாடுகளால் தமிழ் நிச்சயமாகச் சீர்திருத்தமடைந்துவிடும். கல்விமான்களாய்ப் பெரிய பதவியிலிருக்கும் புத்திமான்களால் தமிழ் என்னும் இந்த உயர்ந்தகலை கவனிக்கப்படாமலிருப்பதே அதற்குப் பெருங்குறை.

ஆதலின், இனியேனும் பெரியோர்கள் மேற்கூறிய முறைகளைக்கொண்டோ, தங்களுக்குத் தோன்றும் வேறு வழிகளைக் கொண்டோ தமிழ்க் குற்றங்களைய முன் வருவார்களென நம்புகிறோம்; நம் விருப்பினை அடியார்க்கெளியனாகிய இறைவன் நிறைவேற்றிவைப்பானாக.

ஓம் தத் ஸத்.

---

# சந்தா நேயர்களுக்கு
## 14-வது ஆண்டின் முன்னறிவிப்பு.

நம் போதினியின் மீது அன்புசெலுத்திவரும் சந்தாதாரர்களாகிய நண்பர்களே! அடுத்த விபவஸூ ஆடிமீ கஉ (16-7-1928) நம் ஆனந்த போதினிக்கு 14-வது ஆண்டு பிறக்கப்போகிறது. ஆதலின், சந்தாதாரர்கள் ஷை 14-வது ஆண்டின் சந்தாத்தொகையை அடுத்த விபவஸூ ஆனிமீ கஉ (14-6-1928) க்குள் மணியார்டர் மூலமாகவோ, நேரிலோ செலுத்திவிடும்படி கோருகிறோம். பத்திரிகையை நிறுத்திக்கொள்ள விரும்புவோர் அவ்விவரத்தை ஷை 14-6-1928 க்குள் கார்டின் மூலமாகவோ நேரிலோ தெரிவித்துவிடவேண்டும். மேற்கூறியபடி சந்தாத்தொகையை முன்பணமாகச் செலுத்திவிடுகிறவர்களுக்கு வழக்கம்போல் அடுத்த விபவஸூ ஆனிமீ சஞ்சிகையும், அதற்குப் பின்வரும் சஞ்சிகைகளும் சாதாரண போஸ்டில் அனுப்பப்பட்டுவரும். பத்திரிகையை நிறுத்திக்கொள்ளும்படி தெரிவித்தவர்களுக்கு அடுத்த விபவஸூ ஆனிமீ சஞ்சிகைமட்டும் சாதாரண போஸ்டில் வந்துவிடும். இங்குக் குறித்தபடி சந்தாத்தொகையை முன்பணமாக அனுப்பாதவர்களுக்கும், பத்திரிகை தங்களுக்குத் தேவையில்லையென்ற விவரத்தைத் தெரிவிக்காதவர்களுக்கும் அடுத்த 14 - வது ஆண்டின் சந்தாத்தொகைக்காக அடுத்த விபவஸூ ஆனிமீ பத்திரிகை வி.பி. யில் அனுப்பப்படும். இவர்கள் சந்தாத்தொகையை அனுப்பாமலும், பத்திரிகைவேண்டாமென்று தெரிவிக்காமலு மிருப்பதால் பத்திரிகையை வி. பி. யில் பெற்றுக்கொள்ள விருப்பமுடையவர்களா யிருக்கிறார்களென்று நாங்கள் உறுதிகொள்கிறோம். அதனாலேயே இவர்களுக்கு வி பி. யனுப்பப்படுகிறது. ஆதலின், இத்தகைய நண்பர்கள் வி. பி. யைத் திருப்பிவிடாமல் பெற்றுக்கொள்ளும்படி கோருகிறோம். இவ்வாறு வி. பி. யைப் பெற்றுக்கொள்கிறவர்களுக்கும் சஞ்சிகைகள் வழக்கம்போல் அனுப்பப்பட்டுவரும். வி. பி. யில் 3 அணு அதிகச் செலவும், சஞ்சிகை வந்துசேர வீண்கால தாமதமும் நேருகின்றன. ஆதலின், எல்லோரும் முன்பண மனுப்பிவிடுவதே நலம்.

பினங்கு, சிங்கப்பூர் முதலிய மலேயா நாடுகளுக்கு வி. பி. இல்லையாதலின், அவ்விடங்களிலுள்ள சந்தாதாரர்கள் எல்லோருமே சந்தாத்தொகையை முன்பணமாக அனுப்பிவிடவேண்டும்.

இங்குக் குறிப்பிட்டிருப்பவைகள் எல்லோருக்கும் நன்மைதரக் கூடியனவாதலின் சந்தாதாரர்களாகிய நண்பர்கள் வீண் குதர்க்கம்செய்து நமக்கு வீண் சிரமத்தை யுண்டாக்காமல் இவற்றின்படி நடந்துகொள்ளுமாறு ஒவ்வொருவருக்கும் நினைப்பூட்டுகிறோம். விஷயத்தை யுணராமல் வீண் தர்க்கம்செய்து கடிதங்களெழுதி வேதனையை யுண்டாக்குவோரின் உள்ளப்போக்கைப்பற்றி வருடந்தோறும் குறிப்பிட்டெழுதியிருக்கிறோம். அவற்றை யுணர்ந்த புத்திமான்களுக்கு அவர்கள் செய்கை நன்மைதராத தென்பதும்,

நாம் செய்திருக்கும் ஏற்பாடு இருபாலார்க்கும் நலந்தரத்தக்கதென்பதும் விளங்கும் ஆதலின் புத்திமான்கள் நுட்பமாக எல்லாவற்றையும் ஆராய்ந்து வீண்தர்க்கம் செய்யாமல் நம்முடைய ஏற்பாட்டின்படி நடந்துகொள்வார்களென்றே நம்புகிறோம்.

☞ 14-ம் ஆண்டின் சந்தாத்தொகையை முன்பணமாக அனுப்புகிறவர்களுக்குப் படிப்பதற்கு மிக்க விநோதமாயிருக்கும் 'ஓயாச் சிரிப்பு' என்னும் புத்தகமொன்று இனாமாக அனுப்பப்படும்.

முன்பண மனுப்புவோர் பழைய சந்தாதாரர்களாயிருந்தால், மணியார்டர் கூபனில் தங்கள் சந்தாநம்பரைக் குறிப்பிட்டு, "14-வது ஆண்டுக்கு" என்று விவரம் எழுதி யனுப்பவேண்டும். புதிய சந்தாதாரர்களாகச் சேருகிறவர்கள் புதிய ஆண்டுக்கு என்ற விவரம் எழுதி யனுப்பவேண்டும். பழைய ஒவ்வொரு சந்தாதாரர்க்கும் உரிய சந்தா நம்பர் ஒவ்வொரு மாதத்திலும்வரும் சஞ்சிகையின் மேல் உறையில் வலதுபக்கத்தில் எழுதப்பட்டிருக்கும். சந்தா நம்பர் எழுதுவோர் அதைப்பார்த்துக் கடிதங்கள், மணியார்டர் முதலியவற்றில் எழுதவும்; மேல் உறையின் இடப்பக்கத்தில் 1190 என்ற ரிஜிஸ்டர் நெம்பர் அச்சிடப்பட்டிருக்கும். அதை எழுதக்கூடாது. மேலே குறித்தபடி கையால் எழுதப்பட்டிருப்பதையே குறித்தெழுதவேண்டும். பழைய சந்தாதாரர்களில் சந்தாநெம்பர் தெரியாதவர்கள் முன்பண மனுப்பாமல் வி. பி. யிலேயே சஞ்சிகை பெற்றுக்கொள்வது நலம்.

பழைய சந்தாதாரர்களில் சஞ்சிகையை நிறுத்திவிடும்படி எழுதுவோரும் மேற்குறித்தபடி தங்கள் சந்தா நம்பரைக் குறித்தெழுதவேண்டும். ப-ர்.

## ஜீவிய சந்தா விவரம்.

ஜீவிய சந்தாவின் விவரந்தெரியாமல் சில நண்பர்கள் அதனைத்தெரிவிக்கும்படி நமக்கு அடிக்கடி கடிதங்கள் எழுதிக்கொண்டிருக்கிறார்கள். ஆதலின், அவர்கள் எப்பொழுதும் தெரிந்துகொள்ளும்படி ஜீவிய சந்தாவின் விவரங்களை இதனடியில் குறிப்பிடுகிறோம். நேயர்கள் அவற்றைக் கவனித்துக் கொள்க.

ஜீவிய சந்தா—இந்தியா, பர்மா, சிலோன் முதலிய இடங்களுக்கு ரூ. 15—0—0 ஆகவும், பினங்கு, சிங்கப்பூர், கோலாலம்பூர், ஆப்பிரிக்கா முதலிய அன்னியநாடுகளுக்கு ரூ. 20—0—0 ஆகவும் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. இந்த ஏற்பாட்டின்படி இந்தியா, பர்மா, சிலோன் முதலிய இடங்களில் உள்ளவர்கள் ரூ. 15—0—0ம், பினங்கு, சிங்கப்பூர், கோலாலம்பூர், ஆப்பிரிக்கா முதலிய இடங்களில் உள்ளவர்கள் ரூ. 20—0—ம் செலுத்திவிட்டால் அவர்களுக்கு அத்தொகைகளுக்கு ரசீது அனுப்புவதுடன், அவர்கள் பணம் செலுத்திய மாதத்திலிருந்து அவர்களுடைய ஆயுள்வரைக்கும் மாதந்தோறும் ஆனந்தபோதினிச் சஞ்சிகைகள் அனுப்பப்பட்டுவரும்.

தற்போதிருக்கும் வருட சந்தாதாரர்களும் ஜீவிய சந்தாதாரராகச் சேர்ந்தால் மேற்குறித்த விவரப்படி பூராத்தொகையுமே கட்டவேண்டும்.

அவர்கள் ஆயுளுடன் இருப்பதைத் தெரிந்துகொள்வதற்காக ஒவ்வொரு வருடத்தின் முடிவிலும் தயவுசெய்து, "தாங்கள் தவறாது பத்திரிகை அனுப்பிவந்ததற்காக நன்றி கூறுகிறேம்" என்று ஒரு கடிதமெழுதிக் கையெழுத்திட்டு அனுப்பிவிடவேண்டும்.

எவ்வித காரணத்தைக் கொண்டும் ஜீவிய சந்தாதாரர் ஒருவர், தம்முடைய சந்தாவை மற்றொருவருக்கு மாற்றுதல் கூடாது.

ஜீவிய சந்தாதாரராகச் சேரும் நண்பர்களுக்கு மிக்க அனுகூலமுண்டு. முன் இருக்கும் ஜீவிய சந்தாதாரர்களுக்கும், இனிமேல் சேரும் ஜீவிய சந்தாதாரர்களுக்கும் இதுமுதல் வருடந்தோறும் நமது ஆனந்தபோதினிப் பஞ்சாங்கமொன்று இனாமாக அனுப்பப்படும். சந்தாதாரர்களுக்கெனத் தேதி குறிப்பிட்டு அதுவரை விலை குறைத்துக் கொடுக்கப்படும் புத்தகங்களும் அக்காலம்வரை விலை குறைத்துக் கொடுக்கப்படும்.

ஆதலின், விருப்பமுள்ள நண்பர்கள் ஜீவிய சந்தாதாரராகச் சேர்ந்து கொள்வார்களாக.

## இதுவரை சேர்ந்திருக்கும் ஜீவிய சந்தாதாரர்களின் பெயர்கள்.

1. மு. நாராயண செட்டியார் அவர்கள், தேவகோட்டை.
2. எ. ஆர். ஆர். எ. ஆர். சோமசுந்தரம் செட்டியார் அவர்கள், பர்மா.
3. செல்வி. B. எதிராஜம்மாள், வேப்பேரி.
4. பி. குப்புசாமி ஐயங்காரவர்கள், பரனூர்.
5. வி. ஆர். எம். இராமசாமி செட்டியாரவர்கள், ஷண்முகானந்தபுரம்.
6. கே. சுப்பராயலு செட்டியாரவர்கள், சேலம்.
7. எஸ். என். நடராஜன் செட்டியாரவர்கள், பர்மா.
8. டி. எம். கலியாணராமய்யரவர்கள், திருநெல்வேலி.
9. டி. சண்முகம் பிள்ளை அவர்கள், திருநெல்வேலி.
10. மிஸ்ஸஸ். எம். சின்னப்பு அவர்கள், யாழ்ப்பாணம்.
11. என். கே. எஸ். டி. நாச்சியப்ப செட்டியாரவர்கள், கோட்டையூர்.
12. எஸ். எஸ். சுப்பிரமணிய ஐயரவர்கள், திருவல்லிக்கேணி.
13. கெ. கனகசபை அவர்கள், சாவக்கசேரி.
14. எம். எம். மெய்யப்ப செட்டியார் அவர்கள், ஜெயங்கொண்டபுரம்.
15. எ. சுவாமிநாத முதலியாரவர்கள், சென்னை.
16. ஆர். இலட்சுமணன் அவர்கள், கொளும்பு.
17. எஸ். எஸ். பெரியண்ண பிள்ளை அவர்கள், கம்பளை.
18. எஸ். ஆர். குமாரசாமி அவர்கள், கொளும்பு.
19. பி. குமாரசாமி அவர்கள், கொளும்பு.
20. ஜி. தம்பிபிள்ளை அவர்கள், வெள்ளவத்தை.
21. எம். முத்துத்தம்பி அவர்கள், கொளும்பு.
22. எஸ். இராஜரத்தினம் அவர்கள், கொளும்பு.
23. வி. கதிர்வேலு அவர்கள், கொளும்பு.

24. தம்பி அமிர்தலிங்கம் அவர்கள், யாழ்ப்பாணம்.
25. எம். இளையதம்பி அவர்கள், யாழ்ப்பாணம்.
26. வி. எஸ். எஸ். குமாரசாமி அவர்கள், யாழ்ப்பாணம்.
27 ஸ்ரீ. அம்பலவாணர் அவர்கள், யாழ்ப்பாணம்.
28 வி. எம். நாகலிங்கம் அவர்கள், யாழ்ப்பாணம்.
29. எம். எ. ஆர் எம். மெய்யப்ப செட்டியார் அவர்கள், காரைக்குடி.
30. ஏ. ஆர். முத்தையா அம்பலம் அவர்கள், கொளும்பு.
31. எஸ். ஜி. உருத்திரபதி செட்டியார் அவர்கள், மாயவரம்.
32. எஸ். சிவசாம்பு அவர்கள், பருத்தித்துறை.
33. பி. அப்பாக்கண்ணு முதலியார் அவர்கள், சென்னை.
34. ஆர். சின்னத்தம்பி அவர்கள், நெய்லிடிகன் கேசன்துறை.
35. வி. கணபதி பிள்ளை அவர்கள், சின்னக்கிழக்கூர்.
36. என். ஆர். எம். எஸ். சுப்பிரமணியஞ் செட்டியாரவர்கள், குளிவரை.
37. ஆலவட்டி. செகிரெடரி அவர்கள்.
38. வி. பொன்னம்பலம் அவர்கள், தெல்லிப்பாளை.
39. ஜி. சுவாமிநாத பிள்ளை அவர்கள், சிங்கப்பூர்.
40. ஆர். எம். எம். அண்ணாமலை செட்டியார் அவர்கள், மலாகா.
41. எஸ். வேலாயுதம் அவர்கள், பந்த டெரிப்பு.
42. ஆர். கலுங்கப்ப செட்டியார் அவர்கள், சிறுவயல்.
43. சொ. சொக்கலிங்கம் செட்டியார் அவர்கள், சுங்கைப்பட்டாணி.
44. சி. வரதராஜ முதலியார் அவர்கள், ஈபோ.
45. ஏ. மகாலிங்கம் அவர்கள், குவாலாலம்பூர்.
46. ஏ. ஆர். எம். எ. எம். எம். அருணாசலம் செட்டியார் அவர்கள், செர்பான்.
47. வி. எம். அருணாசலம் செட்டியார் அவர்கள், பட்டர் ஓர்த்.
48. கே. நமசிவாயம் அவர்கள், புக்கெட்மெர்ட்டஜாம்.
49. எஸ். டி. நாகப்ப செட்டியார் அவர்கள், டைபிங்.
50. டி. பி. நாகப்பா அவர்கள், சண்முகநாதபுரம்.
51. கமலாதேவி அவர்கள், டைபிங்.
52. எஸ். எல். கே. என். சுவாமிநாதன் செட்டியாரவர்கள், டைபிங்.
53. ஆர். எம். வி. சொக்கலிங்கம் செட்டியாரவர்கள், டைபிங்.
54. சண்முகசுந்தரராஜன் அவர்கள், ஈபோ.
55. பி. எம். என். எம். முத்துக்கருப்பன் செட்டியாரவர்கள், குவாலாலம்பூர்.
56. எம். எஸ். வடிவேலுப்பிள்ளை அவர்கள், குவாலாலம்பூர்.
57. ஜி. சுந்தரேசன் அவர்கள், பெர்போரா.

---

இவர்களெல்லோரும் நம் ஆனந்தபோதினிமீது மிக்க அபிமானமுடையவர்களாவார்கள். இப்பெருந்தகையாளர்க்கு நாம் எப்பொழுதும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறோம். இவர்களுக்கு நீண்ட ஆயுளையும், நிறைந்த செல்வத்தையும் இறைவன் கொடுத்தருள்வானாக. ப-ர்.




## ஆனந்த மோகன் போஸ்.

(344-ம் பக்கத் தொடர்ச்சி.)

அப்பெண்பாடசாலை வெகு விரைவில் மேன்மை யடைந்து 'பெதூன்' (Bathune) பெண் கலாசாலையாக மாற்றப்பட்டது. பின்னர் அரசாங்கத்தார் அக்கலாசாலையின் நிர்வாகத்தை யேற்றுக்கொண்டனர். அக்கால ராஜப்பிரதிநிதியான 'லார்ட் ரிப்பன்' அவர்கள், போஸின் உழைப்பைப் பாராட்டி 1882-ல் நியமித்த 'கமிஷனின்' தலைவர் பதவியை யேற்குமாறு அவரை வேண்டினர். உண்மையான தேசாபிமானிகள் பதவியையும் பட்டங்களையுமே கருதித் தொண்டு புரிவதில்லையன்றோ? ஆதலின், தமது கொள்கைக்கு மாறாக அக்கமிஷனில் வேலைபார்க்க நேரிடலாமென்ற ஐயப்பாட்டால் அவர் முன்யோசனையுடன் அதனை யேற்கவில்லை. அப்பால் அவரது தொண்டின் திறத்தைமெச்சி கல்கத்தா நகரவாசிகள் அவரை 1895-ல் வங்காள சட்டசபைக்கு அங்கத்தினராகத் தேர்ந்தெடுத்தனுப்பினார்கள்.

இனி, அவரது பொது ஜனசேவையைப்பற்றிப் புகல்வோம். அவர் ஸ்ரீ. சுரேந்திரநாத் பனர்ஜியவர்களின் உதவியோடு கல்கத்தாவில் 'இந்து மகா சபை' யொன்றை நிறுவினார். காங்கிரஸ் மகாசபையின் வளர்ச்சியில் அவருக்கு அளவிடற்கரிய ஊக்கமிருந்துவந்தது. சட்டசபையிலும், இந்து மகாசபையிலும், காங்கிரஸ் இயக்கத்திலும் அவர் கலந்துழைத்தாராயினும், தமது வைதீகக் கொள்கைகளைவிட்டுச் சிறிதும் மாறாமல் உறுதியாயிருந்தார். அகில இந்திய காங்கிரஸின் பன்னிரண்டாம் சம்மேளனத்தில் அவர் வித்தியாபிவிருத்தி விஷயமாகச் சீர்திருத்தங்கள் செய்யவேண்டுமென்று கொண்டுவந்த தீர்மானம், ஏகமனதுடன் அங்கீகரிக்கப்பட்டதுமன்றி, அவருடைய புகழை விரிப்பதாயுமிருந்தது.

**பொதுநல ஊழியம்.**

இவ்வாறு அவர் உடல் பொருளாவியாம் மூன்றினாலும் உழைத்துவரும் நாட்களில், ஆவி அழிவற்றதால் அதற்கு நாளுக்கு நாள் வளர்ச்சி யேற்பட்டது; பொருளை அவர் அறவழியிலீட்டி வந்தமையால் ஆண்டவனருளாவதற்கு மெவ்வித குறைமேற்படவில்லை. ஆனால், அதிக சிரமத்தாலழியுந் தன்மையதான அவருடைய உடலை, திடீரென பயங்கரமான நோய் வருத்தத்தொடங்கிற்று. இக்காரணம்பற்றி வைத்தியர் மொழிந்தவாறு 1897-ல் அவர் உடல் நலத்தை உத்தேசித்து 'ஜர்மனி'க்குச் சென்றார். அந்நாட்டுச் சீதோஷ்ணநிலையால் அவருடலைப்பற்றிய உபாதி நீங்க, அப்பால் அவர் ஜர்மனி தேசத்தை

**உடலைப்பற்றிய உபாதி.**

விட்டகன்று இங்கிலாந்தடைந்தார். தேக பலஹீனத்தைப் பொருட்படுத்தாது அவர் பாரததேவியின் திருத்தொண்டாற்ற, பன்மடங்கு உறுதியுடன் இங்கிலாந்தில் ஓய்வில்லாமற் பல மேடைகளிற் பேசிவந்தார். ஒருசமயம் அவர் உக்கிரமாகப் பேசி முடித்தபிறகு மயக்கத்தால் கீழே விழுந்தார். அதுவே அவர் கூட்டத்திற்பேசிய கடைசித் தடவைபோலும். அன்றுமுதல் அவர் படுக்கை மனிதரானார். அவர் சரீரம் படுத்ததேயன்றி, உயிர் தாய் நாட்டுத்தொண்டைத் தொடுத்துப் புரிந்துகொண்டேயிருந்தது. கண்காணாத் தேசத்தில், கடலாற்றடுக்கப் பெற்ற அந்நியரூரில் அவர் தங்க மனமில்லாது இந்தியாவுக்குத் திரும்பினார்.

அவர் சீமையிற் புரிந்த தொண்டை மெச்சினாள் போல் தேச அன்னை அவரை அகில இந்திய காங்கிரஸ் மகாசபையின் சென்னையில் நிறைவேறிய 1898-ம் ஆண்டு விழாவின் அக்கிராசனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கச் செய்தாள். அப்பெரியாரது முன்னுரையால் அறிவாளிகள் நிறைந்த காங்கிரஸ் அவை உற்சாகமும், ஊக்கமும், தேசபக்தி மணமும் பூரிக்க விளங்கிற்று. அவர் தெய்வத்தையும், பாரததேவியையும் முதலிற் கண்களி லானந்த பாஷ்பம் ததும்பத் துதித்துப் பின் தமது சாதுர்ய வசனமழை நீரால் அக்குழாத்திற் குழுமியிருந்தாரை நீராட்டித் தமது கொள்கையென்ற விபூதியளித்து உண்மைத்தொண்டென்ற உபதேசஞ் செய்தருளினர்.

**காங்கிரஸ் அக்கிராசனம்**

நாட்களாக வாக அவர் உடலைப்பற்றிய உபாதி மிக்கமையினால் படுத்த படுக்கையா யவர் வருந்தினார். அவ்வமயம் கல்கத்தா நகரவாசிகள் 'வங்காள ஒற்றுமை நிலைய' மொன்றைக் கட்டுவதாகத் தீர்மானித்து அக்கட்டிடத்திற்கு போஸை அஸ்திவாரக்கல் நாட்டுமாறு வேண்டினர். அதுதான் அவர் வெளியே தோன்றிய கடைசித்தடவை. பஞ்சணையிற் படுத்தவாறே போஸ் அந்நிலையத்திற் கேகித் தாம் வரைந்துள்ள நன்றிகூறல் என்னும் உரையை யளிக்க, ஸ்ரீ. சுரேந்திரநாத் பனர்ஜி, அதைப் படித்தார். அதுவே அவரது சாமோபதேசம் போலும். அவர் பாரதநாட்டின் ராஜீய, தேசீய, சமய உத்தாரணார்த்தமாகப் புரிந்தசேவை ஏனைய தலைவர்களுக்கு வழிகாட்டுவதாயிருந்தது.

அவருடைய வாழ்வாகிய திரை மூடப்படுங்காலம் நெருங்கிற்று. ஆரம்ப காலத்தில் அவர் பிரம்ம சமாஜத்தலைவரும், சமயாசார சீர்திருத்தக்காரருமான ஸ்ரீ கேசப்சந்திரசேனருடன் அக்கொள்கையைப் பரவச் செய்வதில் தியாகியாக விளங்கி, பின் ஸ்ரீ. கேசப் சந்திரசேனர் தமது ஐந்துபிராயமுள்ள பெண்ணை பீகார் இராஜகுமாரருக்கு விவாகம் செய்து கொடுத்தது கண்டு, பிரிந்து சுத்தாரம் பிரம்மசமாஜ மென்று வேறொரு சபையை ஸ்தாபித்து அதன் வளர்ச்சிக்கென்று அரும்பாடுபட்டு வந்தார். சமயவளர்ச்சியான தீபம் ஆயுட்கால முழுவதும் அவருள்ளத்திற் பிரகாசித்துக்கொண்டிருந்தது. அவர் ராஜீய விஷய

**அந்தியக்காலம்**

மாகப் பேசும் பொழுதெல்லாம், அவ்வுரைகளில் சமயமணமே சால்புடன் கமழும். அவரது அதிக உழைப்பே அவரது மரணத்திற்குக் காரணமென்று பல ரபிப்பிராயப்பட்டனர்.

அன்னையின் அருட்டொண்டர்களான சுரேந்திரநாத்பனர்ஜியும், ஆனந்த மோகன போசும் 1906 ம் ஆண்டிலேயே பேரின்பவீடெய்தினர். அவருடைய சவத்துடன் அன்பர்கள் பலரும் ருத்திரபூமிக்குச் சென்று போற்றி அவரது தேசசேவையைப் புகழ்ந்து பாராட்டினர். பரிசுத்த மனதுடன், உள்ளன்பு பொங்க, அடக்கமென்பதே அவதரித்ததுபோல் தண்பணியாற்றிய இப்பெரியார் பிரிவைக் குறித்து வருந்தி அவ்வாண்டு அகில இந்திய காங்கிரஸ் மகாசபையின் வரவேற்புக் கழகததலைவரான டாக்டர் ராஸ்பிகாரிகோஷ்,

முடிவுரை.

'ஆனந்த போஸின் மரணம் உண்மையில் தலைவர்களை ஆற்றொணுத் துயரத்தி லாழ்த்திவிட்டது. அவர் தமது தேசசேவையைத் தூயவழியில், ஆற்றலுடன் புரிந்ததை அகிலமே புகழும். அவர் ஒரு தொண்டனைப்போல ராஜீயத்துறையி லுழைத்தவர். மக்களிடத்தில் அவர் ராஜீய உணர்ச்சியுடன் சமயப்பற்றையும் உடனுக்குடனே பெருக்கிவந்தார்.' என்று பேசினர். அம் மகானுடைய நீடித்த பிரிவைக் கேட்டுக்கண்கலங்காதவர் வங்காளத்திலில ரெனலாம். கல்வியிலாகாவிற்கு அவருடைய மரண தினத்தில் விடுமுறை யளிக்கப்பட்டது. தானமும்-தாய்த் தொண்டாகிய-தவமும் தாம் புரிந்தமை யால் வானவர்நாடு வழிதிறந்து இப்பெரியாரை யேற்றுக்கொண்டது.

ஸ்ரீ. லக்ஷ்மீ காந்தன்.

## தேசத்தில் தேவதாசீயம்.

ஒவ்வொரு மனிதனுக்கும் அறியாமை மிகுந்த காலமொன்றுண்டு; விழித்து விரைந்து நன்மையை நாடுங்கால மொன்றுண்டு. இவை மானுடப் பிறவியி னியல்பு. இவ்வியல்பின்படியே மனித சமூகமும் சரித்திர ஆதாரப் படி ஆடையின்றி அலைந்தகாலமுமுண்டு; நாகரீகமும், மத அரசியல் ஞானமு மடைந்து, ஜீவாத்ம பரமாத்ம சம்பந்தம், அரசர் மாண்பு முதலியவற்றை ஆராய்ந்து, சிறிது சிறிதாக மேன்மையுற்று நாகரீக முதிர்ச்சியடைந்த காலமுமுண்டு. இவற்றால் பிரபஞ்ச இயற்கைச் சாஸ்திரப்படி நாடுகளும் இத்தகைய நிலைகளை யடைந்தே யிருக்கவேண்டுமென்பது உறுதியாகும். நம் நாட்டின் முதிர்ந்த நாகரீகத்தை மேல்நாட்டு நாகரீகக் கண்ணுடன் ஆராயாமற் பார்த்தால், மேல்புல் மேய்ந்து, வெளிவேடம் போடும், ஆராய்ச்சி, சீர்திருத்தக்காரர்களெல்லாரும் நம் பண்டைய சித்தாந்தங்களை யும், வாழ்வையும், இராஜீய மதாசாரக்கொள்கைகளையும், அவற்றை விரிக்க வெழுந்த வேதாகம புராணங்களையும் ஆலிங்கனஞ்செய்து அஞ்சலிசெய்வ ரென்பதிலையமின்றாம். 'தேவதாசீயம்' என்ற விஷயமும் நம் பண்டைச் சிறப்புக்களுடன் கலந்து நிற்கின்றது. முற்காலந்தொட்டு இவ்வகுப்பார் இருந்துவருவதாகக்கூற எத்தனையோ ஆதாரங்களுள்ளன. இவர்களுடைய சங்கீத நாட்டியத்திறங்களைப் புகழ்ந்து உரைக்காத நூலில்லை. அக்காலங்களில் இவ்வகுப்பினருக்கு விதிக்கப்பெற்ற நெறியுடன் இவர்கள் ஆதரிக்கப்பெற்று வந்தனர். இவர்களைக் குறித்து மகாத்மா காந்தியடிகள் தென்னாட்டுச் சுற்

றுப்பிரயாணத்தில் சில அரிய அபிப்பிராயங்களைக்கூற, புற்றிலிருந்து ஈசல் கிளம்புவதுபோல் இப்பொழுது பத்திரிகைகளில் தேவதாசிகளைப்பற்றிவரை யப்பெறாத நாள் காண்டலரிதா யிருக்கின்றது. இதைப்பற்றி ஆங்காங்கு காணப்படும் மகாநாடுகளையும், தீர்மானங்களையும், ஆராய்ச்சி சம்பந்தமான விஷயங்களையும் பார்க்க, வியப்பும், மயக்கமும் எழுந்து நம்மைக் 'கல்லாத பேர்களே நல்லவர்கள் நல்லவர்கள்' என்ற தாயுமானவர் வாக்கைப்போற்றும் நிலையை எய்த வைக்கின்றன. மேல்நாட்டாரும் தங்களுக்குச் சந்தர்ப்பங் கிடைத்தமைக்காக மகிழ்ந்து, இவ்விஷயத்தைப் பத்திரிகைகள் வாயிலாகக் கண்டு நகைத்து எள்ளிப் பேசுகின்றனர்.

மாதர் சமூகம் ஆடவ சமூகத்தைப்போன்ற அத்துணை மனவுறுதி யுடையதல்லவென்பது நூலாதாரங்களாலும், சுயானுபவத்தாலும் அறிந்து ஒப்புக்கொள்ளப்பட்ட விஷயம். இத்தகைய பெண்களிற் சிலர் மனதிடம் பெற்ற வீரப்பெண்களாய் முற்காலங்களில் விளங்கியிருக்கலாம், இவர்களே கோயில்களில் கைங்கரியஞ் செய்யவும் நியமிக்கப்பெற்றிருக்கலாம். இவர் களே கால மாறுபாட்டால், தங்கள் கடமைகளினின்றும் வழுவி இத்தகைய நிலையை யின்றெய்தியிருக்கலாம். 'தாசி' என்ற சொல்லைக்கொண்டு விலை மாதர் என்ற பொருள் கொள்ள இடமில்லை. 'தாசி' என்பது 'தாஸன்' என்ற சொல்லின் பெண்பாற் பெயராகும். ஆக இவ்விரண்டு சொற்களும் இறை வன் மாட்டுத் தொண்டு புரிவார் என்ற பொருளைத் தருகின்றனவேயன்றி வேறில்லை.

ஆனால் 'தாசி பொன்னிக்குக்கம்பன் அடிமை' என்ற கதைப்படி தாசி என்ற சொல்லுக்கு விலைமாதரென்ற பொருளை விளக்கப்படுகின்றது. இது வடசொல். தென்மொழியில 'தேவடியாள்' 'பரத்தை' 'விலைமாதர்' 'பொது மகளிர்' என்ற சொற்கள் நூற்களிற் பெரும்பாலும் காணப்படுகின்றன. அந் நூல்களை யாதாரமாகக் கொண்டு இவர்கள் யாவரும் ஆலயகைங்கரியமே செய்து வந்தார்களெனக் கூறுவதற்கில்லை. இன்றைய நிலையைக்கொண்டும் ஊகிக்கமுடியாது. சிலப்பதிகாரம்,

> பிறப்பிற் குன்றாப் பெருந்தோண் மடந்தை
> தாதவிழ் புரிகுழல் மாதவி... (சில. அ. கா. கூ. எ.)

யென்னும் பரத்தை அரங்கேறி ஆடல்பாடல் செய்தாளெனவும், கோவலன் அவளிடங் காதல்கொண்டு, சிலகாலங் கூடியிருந்து தன் பொருளெல்லா மிழந்து, பின் கண்ணகியை யடைந்து, 'பொய்யை மெய்யாகக்காட்டி யொழு கும் பரத்தையோடு மருவி ஒழுகிய காரணத்தால் மூன்னோர் தேடிவைத்த பொருட் குவியல்களை யெல்லாந் தொலைத்து வறுமை யடைந்தேன்; அஃது எனக்கு மிக்க நாணத்தைத் தருகின்றது' என்று கூறி வருந்தினனெனவுங் கூறுவதால், இம்மரபினரின் 'பொது மகளிர்'த் தொழில் நன்கு ஊகிக்கப் படும். அன்றியும், அச்சிலப்பதிகாரத்தின்படி, பரத்தையர்க்கு 'ஆடலும் பாட லும் பாணியுந் தூக்கும்' (சில. அ. கா. கசு. கஎ.) உரியவையென்பதும் பெறப் படும். இவற்றால் பரத்தையருக்கு இசையும், நாட்டியமும் உரிமையானவை யென்பதும் பெற்றாம். இவற்றுடன் அன்னோர் பொது மகளிராகவுமிருந்து வருகின்றனரென்பதற்குப் பலகோடி ஆதாரங்களுமுள்ளன. இவர்கள்தான் மையைப்பற்றிக் கூறப்படுகின்ற யாவும உண்மையே. தேவர் உலகிலும் இத் தகைய தேவதாசிகள் பொதுமகளிரென்ற பொருளில் இருந்து வருவதாக 'நாட்டியப் பெண்களாட' என்ற நூற்பிரயோகத்தினின்றும், மற்றுஞ் சில வடமொழி நூலாதாரங்கொண்டும் விளக்கலாம்.

இனி, இவ்வகை மாதர் குழாம் நல்வழிப்படுவது அவ்சியமென்பதே மகாத்மாவின் நல்லுரை. இதனைக் குறித்துத் திசைகளில் எண்ணற்ற மறுப்புகளும், ஆலோசனைகளும் வெளிவந்து கொண்டே யிருக்கின்றன. தேவதாசிகள் கூட்டங்கூடிச் சீர்திருத்தத்திற்கு விரோதமாகத் தீர்மானங்களை நிறைவேற்றி வருகின்றனர். இதனைக் குறித்துச் சில சொற்களைமட்டும் ஈண்டு வரைய இசைகின்றோம். ஒரு நாட்டின் மேன்மை செழிப்பதற்கு முக்கிய காரணமாயிருப்பவர் பத்தினிப் பெண்டிரே. பத்தினிப் பெண்டிர் மலிந்த நாட்டில் பெண்களால் நேரும் கொலை, களவு முதலியன இன்றாம். இதனால் கைத்தொழில், வாணிபம், விவசாயம், வீரம், தியாகம் முதலியன பெருகிக், கொலை, களவு, பொய்யுரை, பேதைமை முதலியன தேயும். தொன்மைதொட்டு வருவதெதையும் நாம் அனுசரிக்கவேண்டுமென்ற நியதி எங்குமில்லை. கால மாறுபாட்டால் நாகரீகம் மாறுபடுமென்பது இலக்கணவரையறை யாதலின் தீயவை யொழிவதில் எவரும் குற்றங்கூற வியலாது. நம் நாட்டின் பெருங்குறைகளில் விலைமாதர்கள் தமது ஜீவனார்த்தமாக அத்தொழிலை நடத்துவதும் ஒன்று. அதனால், "மனையவள் விரோதமொன்று,மாதவன் விரோதமிரண்டு, தனமது விரயமூன்று, சகலரும் நகைத்தல் நான்கு, தினந்தினம் லச்சை ஐந்து, தேகத்தில் பிணியோடாறு, வினையுறு நரகமேழு, வேசியை விரும்புவோர்க்கே" என்ற மெய்யுரைப்படி ஆடவர் பலவிதத் துன்பங்களையும் தாமனுபவிப்பதுமன்றி, நாட்டில் வல்லமை, நல்ல சந்ததி முதலியவையின்றிக் குறைவதற்கும் ஏதுவேற்படுகின்றது. இச்சீர்திருத்தத்தை முதலில் திருவாய்மலர்ந்தருளிய மகாத்மாவையும், அதனைச் சென்னைச் சட்டசபையில் நிறைவேற்றவிருக்கும் ஸ்ரீமதி - முத்துலக்ஷ்மி அம்மாளையும் தேவதாசிகளும், அவர்களிடத்து அனுதாபமுள்ளவரும் நிந்தித்து அச்சட்டம் நிறைவேறாததற்கான ஏற்பாடுகளைச் செய்து வருகின்றனர். நன்மையான விஷயங்களை எதிர்க்கும் நாட்டினியல்பு எத்துணை அநாகரீகமானதென்பதை ஈண்டு நாம் விவரிக்கவேண்டிய அவசியமில்லை. காங்கிரஸ் சார்பாகத் தேர்தலில் நின்று வெற்றிபெற்ற சட்டசபை அங்கத்தினர்கள் இவ்விஷயத்தை ஆராய்ந்து தமது கடமையை உணர்ந்து தக்க தீர்மானம் செய்வார்களெனப் பொதுஜனங்கள் ஆவலுடன் எதிர்பார்க்கின்றனர். இனி, அத்தேவதாசியர் முறைப்படி விவாகஞ் செய்துகொண்டு, பாதநாட்டியம், சங்கீதம் முதலியவற்றை வளர்த்து, இன்னும் ஜீவனார்த்தமாக இராட்டையைக் கைக்கொண்டு, தேசசேவையில் அவர்களும் ஈடுபடுமாறு இறைவன் கருணை புரிவானாக. தேஸ் தாஸன்.

காந்தி தரிசனம்.

தாசிகள், தாமரைமலரைத் தனது உறைவிடமாகக் கொண்டுள்ள இலக்குமியை யொத்துக் கற்புக்கரசிகளாகி கதர்த் தொழிலைக் கைக்கொண்டு வாழ்வார்களாக! நாட்டுநலம் பெருக.

(அசரீரி)





## வேதாந்த சார சங்கிரக வசனம்.

(347-ம் பக்கத் தொடர்ச்சி.)

சீடனே! பிரம்மமானது இவ்வுலகத்திலாகிலும் வேறு உலகங்களிலாகிலும் குகைகளிலாகிலும் தீர்த்தங்களினிடத்திலாகிலும் விசேஷித்த கர்மங்களிலாகிலும் சாஸ்திரங்களிலாகிலும் இல்லை. விசாரிக்குமிடத்து, அப்படி விசாரித்துப் பார்க்கிறவர்களுந்த (வேறாக இல்லாமல்) தானாகவே யிருக்கிறது. மூடனான ஓர் இடையன் தன் தோளின்மீது ஆட்டை வைத்துக்கொண்டு ஆட்டைக்காணேம் ஆட்டைக் காணேமென்று காட்டிலும் மேட்டிலும் சென்று தேடியலைவதுபோல், நீயும் உன்னிடத்துள்ள ஆன்மசொரூபத்தை அறிந்துகொள்ள முடியாமல் எந்த சாஸ்திரத்திலிருக்கின்றதோ என்று மயங்குகின்றாய். ('சித்தமறியாதபடி சித்தத்தில் நின்றிலகு திவ்யதேசோமயத்தை' என்றார் தாயுமானார்.) பண்டிதர்கள் தம் சீவான்மாவே பரமான்மாவென்றும், பரமான்வே சீவான்ம ரூபமாக இருக்கிறாரென்றும் கருதியும், திடநிச்சயத்தின் பொருட்டு (அதிக திடம்செய்துகொள்வதற்காக) மீண்டும் பஞ்சகோசங்களினிடத்து ஆன்ம சொரூபமுளதாவென்று தேடுகின்றனர். நீயோ ஆன்ம சொரூபத்தை மறந்து ஆன்மாவினிடத்தில் அநாத்துமத்துவத்தையும், அநாத்தும தருமங்களையும் ஆரோபித்துக்கொண்டு வீணாகத் துக்கிக்கின்றனே. (நீ ஆன்ம சொரூபத்தை மறந்து சத்திய ஞானாநந்த லக்ஷணமாகிய ஆன்மாவினிடத்தில் ஆன்மாவல்லாத தேகத்தையும் தேகத்தின் தர்மங்க (தன்மைக)ளாகிய துக்காதிகளையும் ஆரோபித்துக்கொண்டு, 'நான் துக்கி' என்று துக்கிக்கின்றனே. இவ்வளவேயன்றி உண்மையில் உன்னிடத்தில் துக்கமானது இல்லை )

### ஆத்மானாத்ம விவேகம்.

அன்புள்ள புத்திர! ஆத்மா இன்னதென்றும், அநாத்மா இன்னது என்றும் பகுத்தலாகிய ஆத்மானாத்ம விவேகத்தை உனக்குக் கூறுகின்றேன். இதைக் கேட்டவுடன் அனாத்மாவாகிய தேகரூபமான பந்தத்தினின்றும் விடுதலையடைவாய். ஆகையால் ஆவலாய்க்கேள் என்று இவ்வாறு கூறிக் குருவானவர் அத்தியாரோபம் அபவாதம் என்னும் இரண்டு யுக்திகளினால் நிஷ்பிரபஞ்சத்தன்மையை நிரூபிக்கின்றவராய் ஆன்மசொரூபத்தை நன்றாய்ப் போதிக்கிறார்.

### அத்தியாரோபம்:—

சர்ப்பமல்லாத கயிறு முதலானவற்றில் சர்ப்பம் என்னும் பாவம்தோன்றுவதுபோல, உள்ள வஸ்துவினிடத்தில் இல்லாத வஸ்துவை யாரோபித்தல்

அத்தியாரோபமாம். அப்படியே சச்சிதானந்த வடிவ பரப்பிரம்மமே உள்ள வஸ்து. அதனிடத்தில் இந்தக் காணப்படும் உலகம் ஆரோபிக்கப்பட்டது. ஆகையால் கயிற்றினிடத்துக்காணப்பட்ட சர்ப்பம் பொய். உண்மையிலுள்ளது கயிறு மாத்திரமே. அதைப்போல உலகம்பொய். பிரம்மம் ஒன்றுமே மெய்.

சீடன்:—ஞானசிரியா! கயிற்றைக்கண்டு இது பாம்பு என்றுஅறியும் பிராந்தி எவனோ ஒருவனுக்கே உண்டாகும். அப்படி பிரம்மத்தினிடத்தில் உலகப்பிராந்தி ஒருவனுக்கே உண்டாயிற்றா? எல்லாருக்கும் பிராந்தி உண்டாயிற்று என்பதெப்படி?

குரு:—நல்ல கேள்வியே கேட்டனை. இருக்கட்டும். ஆகாயத்திற்கு ரூபமுண்டா? இல்லை. ரூபமில்லாத வஸ்துவிற்கு நிறமிருக்குமா? இராது. அங்ஙனமாக, ஆகாயத்தில் நீலநிறம் எப்படி எல்லாருக்கும் காணப்படுகிறது? பிராந்தியாலன்றோ! இங்கே எல்லாருக்கும் எப்படி பிராந்தியுண்டோ அப்படியே அவ்விஷயத்திலும் எல்லாருக்கும் பிராந்தியுண்டென்றே கொள்ளவேண்டும்.

(பழுதை யதனிற் றோன்றியிடும் பாம்பை யுள்ள படிநோக்கின்
பழுதை யாயே தோன்றியிடும் பாம்பு மதுவாய் விடுமஃதின்
பழுதில் சிவத்தில் தோன்றியிடும் பன்மை யுலகை நோக்கிடின்
பழுதில் சிவமே யாய்த்தோன்றும் பன்மை யுலகு மதுவாய்ப்போம்.

என்று அத்துவித வுண்மையும்,

கானல்நீர் கிளிஞ்சில் வெள்ளி கந்தர்ப்ப நகர் கனவூர்
வானமை கயிற்றில் பாம்பு மலடிசேய் முயலின் கோடு
மீனமாம் தறிபுமானிற் பிரபஞ்ச மெல்லாம் பொய்யே
ஞானமெய் மகனே யுன்னை நம்மாணை மறந்திடாயே.

என்று கைவல்ய நவநீதமும்.

"பொய்யான உலகத்தை மெய்யா நிறுத்தியென்
புந்திக்குளிந்த ஜாலம் சாதிக்குதே.
ஜகம் பொய்யெனத் தம்பட்ட மடியே"

என்று தாயுமானவரும் கூறுவனவும், இன்னோரன்ன பிறவும் ஈண்டறியத் தக்கனவாம்.)

அஞ்ஞானம்:—இந்த அத்தியாரோபம் எதனால் உண்டாயிற்றெனில் சத்ரூபமாகிய பிரம்மத்தின் காரியமாயுள்ளதும், பிரம்மத்தினும் வேறான லக்ஷணமுள்ளதுமாகிய அஞ்ஞானமே அத்தியாரோபத் (அத்தியாசத்) திற்குக் காரணமாகின்றது.

எந்த வஸ்துவானது ஒரு காலத்தில் (ஆராய்ச்சி செய்யாத காலத்தில்) காணப்பட்டு மற்றொரு காலத்தில் (ஆராய்ச்சியின்போது) பாதிக்கப்படுமோ (இல்லாமற் போகுமோ) அது அவஸ்துவென்று கூறப்படும். கிளிஞ்சிலி

*

ளிடத்துக் காணப்படும் வெள்ளித்தோற்றம் மயக்க காலத்தில் காணப்படு கின்றது; ஆராயுமிடத்து இல்லாமற்போகின்றது. ஆகையால் அங்குக்கண்ட வெள்ளி அவாஸ்தவப் பொருள். ஆனல் கிளிஞ்சிலோ வாஸ்தவப் பொருள். ஏனெனில் அது நாம் வெள்ளியாகக் கண்டதற்கு முன்னும் இருந்தது. வெள்ளியென்று கண்டபோதும் கிளிஞ்சிலாகவே யிருந்தது. அதன்பின்னும் கிளிஞ்சிலாகவே யிருக்கும். ஆகையால் இறந்தகாலம் நிகழ்காலம் எதிர்காலம் என்னும் முக்காலத்து மிருப்பதாகிய கிளிஞ்சில் வாஸ்தவப்பொருள். அந்தக் கிளிஞ்சிலில் காணப்பட்ட வெள்ளித் தோற்றமானது ஆராய்ச்சியில் பாதிக் கப்பட்டுப்போய் விட்டதுபோல கிளிஞ்சிலானது பாதிக்கப்படவில்லை யல் லவா? ஆகையால் அது வாஸ்தவப்பொருள். பாதிக்கப்பட்ட வெள்ளி அவாஸ் தவப் பொருள். இந்தத் திருஷ்டாந்தத்தின்படி ஜகத்தின் அத்தியாசத்திற் குக் காரணமாயுள்ள அஞ்ஞானமும் அவஸ்து என்னும் பெயருடையதாகும். (பாதிக்கப்படாத பரமாத்மா வாஸ்தவமென்றும் ஜகத் பிராந்திக்குக் காரண மான அஞ்ஞானம் அவாஸ்தவமானதென்றும் அறிக.)

இந்த அஞ்ஞானம் சத்து (உள்ளது) என்ருவது, அசத்து (இல்லது) என்ருவது வேறு இத்தன்மையானதென்ருவது கூறக்கூடியதன்று. சத்தினு லும் அசத்தினுலும் நிர்வசனிப்பதற்கும் கூடாதது. (அநிர்வசனீயமாகவுள்ளது) சத்துவம் ராஜசம் தாமசம் என்னும் முக்குணங்களை யுடையது. பிரம்மசொரூ பத்தை யறிந்துகொள்வதால் பாதிக்கப்படுவது. பிரம்ம லக்ஷணத்திற்கு வேருன லக்ஷணமுடையது. அநிர்வசனீய சம்பந்தத்தால் ஆசிரயித்துக் கொண்டு அந்தப் பிரம்மத்தினிடத்திலிருப்பது. ஆயினும் சூரியகாந்த மணி யினிடத்துள்ள உஷ்ண சத்தியானது தனக்கு ஆசிரயமாயுள்ள அந்த மணிக்கு எப்படி தோஷத்தை யுண்டாக்குவதில்லையோ அப்படியே இவ்வஞ்ஞான மும் ஆசிரயமான வஸ்துவிற்கு தோஷத்தை யுண்டாக்குவதல்ல.

இந்த அஞ்ஞானம் சமஷ்டி, வியஷ்டி என இருவகையாகக் கூறப்படு கின்றது. (மரங்கள்போல் வியஷ்டிபேதம் வனமெனல் சமஷ்டிபேதம் (கைவல்யம்). மரம் என்பது வியஷ்டி. அனேக மரங்களின் கூட்டத்தைத் தோப்பு, வனம் என்று சொல்வது சமஷ்டி) விருக்ஷங்களின் சமுதாயம் (கூட்டம்) தோப்பாவதுபோல நானுவிதமாகப் பிரசித்தமாகவுள்ள அஞ் ஞானங்களுக்குப் பேதமில்லை யாகையால் ஏகத் (ஒன்றுபட்ட) தன்மையால் சமஷ்டியாகும். இந்த சமஷ்டி சுத்த சத்துவமே லக்ஷணமாகவுள்ள மாயை என்று கூறப்படுகின்றது.

(தொடரும்.) பூ. ஸ்ரீநிவாஸன், தமிழ்ப்பண்டிதர், சித்தூர்.

---

சந்தாதாரர்களுக்கு:—சந்தா நம்பர் தெரியாதவர்கள் மாதமாதம் வரும் சஞ்சிகையின் மேலுள்ள விலாசத்தில் குறிக்கப்பட்டிருக்கும் நம்பரைப் பார்த்துக் குறித்து வைத்துக்கொள்ளக் கோருகிறோம்.




(359-ம் பக்கத் தொடர்ச்சி.)

## முடிந்த ஞானம்.

பாண்டவர்கள், வனவாச, அக்ஞாதவாசங்களை முடித்து வெளிப்பட்ட பிறகு, துருபதமகாராஜன் குலகுருவாகிய உலூகமாமுனிவரை அஸ்திஞபுரம் போய்த் திருதராஷ்டிர மஹாராஜனைக்கண்டு, உமது கட்டளைப்படி பாண்டவர்கள் பிரதிக்ஞையை நிறைவேற்றிவிட்டு வெளிப்பட்டுத் தங்கள் பாகமாகிய ராஜ்யத்தைப்பெற விரும்புகிறார்கள். நீங்கள் சொன்ன வாக்கை நிறைவேற்ற வேண்டுமென்று கேட்கச் சொன்னார்கள். அவன் முனிவரை அனுப்பிவிட்டுச் சஞ்சயனைப் பாண்டவர்களிடம் தூதாக அனுப்பி, நீங்கள் தவம்புரிந்து மோட்சத்தை அடையுங்கள். துரியோதனன் இராஜ்யத்தை ஆளட்டும் என்று சொல்லச் செய்தான். அதுகேட்ட பாண்டவர்களும், கண்ணபிரானும் மனம்வருந்தி, நாங்கள் "எங்கள் பாகத்தையே விரும்புகிறோம். கொடாவிட்டால் யுத்தம்புரிந்து எங்களுடைய பிரதிக்ஞையை நிறைவேற்றிவிட்டுப் பிறகு தவஞ்செய்யப் போவோம். ஆதலால் யுத்தம், அல்லது இராஜ்யம் ஆகிய இரண்டிலொன்றுக்கு அனுமதி கொடும்" என்ற வார்த்தைகளைச் சஞ்சயனிடம் சொல்லி அனுப்பினார்கள். சஞ்சயன் மீண்டு அரசனிடம் போய்ப் பாண்டவர்கள் தங்களுடைய இராஜ்யம் அல்லது யுத்தம் ஆகிய இரண்டிலொன்றை விரும்புகிறார்கள். அவர்கள் கூறிய வசனங்களை நாளையதினம் காலையில் சபையில்வந்து தெரிவிக்கிறேன் என்று சொல்லிப் போய்விட்டான். அதனால் திருதராஷ்டிர மஹாராஜன் இரவில் தூக்கமில்லாமல் வருந்தினன். அப்போது விதுரர் ஸனத்ஸுஜாத முனிவரை அழைத்துத் திருதராஷ்டிர மஹாராஜனுக்கு மெய்ஞ்ஞானத்தை உபதேசிக்கும்படி பிரார்த்தித்தார். முனிவர் திருதராஷ்டிரனை நோக்கி, "மஹாராஜாவே! நான் உமக்கு என்ன சொல்லவேண்டும்? விரும்பியதைக் கேளும், சொல்லுகிறேன்" எனத் திருதராஷ்டிரன், "முனிபுங்கவரே! தாங்கள் மரணமென்பது ஒன்று இல்லையென்று கருதுகிறதாகக் கேள்விப்பட்டேன். அப்படியானால் தேவாசுரர்களும் ரிஷீசுவரர்களும் மரணம் உண்டென்று அதைக் கடப்பதற்காகக் கொடிய தவம் புரிந்திருக்கிறார்களே! இவ்விரண்டு அபிப்பிராயங்களில் எது உண்மை? அதனை முதலிற் கூற வேண்டுகிறேன்" என்றான்.

முனிவர், "அரசனே! சற்கருமத்தால், மரணத்தை விலக்கக்கூடும் என்று சிலரும், மரணமேயில்லையென்று சிலரும் கூறுகிறார்கள். இவற்றுள் எது நிச்சயமென்று கேட்கிறீர்; கவனமாய்க் கேளும். இரண்டும் உண்மையேயாம். ஞானிகள் அறிவில்லாமையால் மரணம் உண்டாகிறதென்று கருதுகிறார்

கள். அந்த அறிவில்லாமையாகிய அஞ்ஞானமே மரணமென்று நான் அபிப்பிராயப் படுகிறேன். அஞ்ஞானமின்மையே நித்யத்வம். அஞ்ஞானத்தால், தோல்வியையும், மரணத்தையும் அசுரர் அடைந்தார்கள். மரணம், புலியைப் போல மனிதர்களை விழுங்குவதில்லை. அம்மரணமும், மரணத்தின் உருவமும் நிச்சயமில்லாதவை. வேறு சிலர் எமனே மரணமென்று கருதுகிறார்கள். இது மனதின் பலஹீனமென்பது அறிஞர் கொள்கை. ஆத்மஞானமே நித்யத்வமாம். மரணமென்று எண்ணப்படுகிற எமன் பிதிர்லோகத்தை ஆள்கிறான். புண்யாத்மாக்களுக்கு வாழ்வையும் பாபாத்மாக்களுக்குத் துக்கத்தையும் கொடுக்கிறான். அவனுடைய கட்டளையால் மரணமானது கோபம், அறியாமை, பேராசை இவைகளின் சொரூபமாக மனிதரிடத்தில் உற்பத்தியாகின்றது. அகங்காரவசப்பட்ட மனிதன் எப்போதும் அதர்மமார்க்கத்தில் நடக்கிறான். தன் இயற்கையான சுபாவத்தை அடைவதில் ஒருவனும் சித்தி பெறுவதில்லை. ஏனென்றால் அவன் அறிவு மயங்கியிருக்கிறது. மனிதர்கள் காமவசப்பட்டுச் சரீரத்தையிழந்து அடிக்கடி நரகில் விழுகிறார்கள். எப்போதும் இந்திரியங்களுக்கு வசப்பட்டவர்களாய் நடக்கிறார்கள். அதனாலேதான் அஞ்ஞானத்தை மரணமென்று அறிஞர் கூறுகிறார்கள். தர்மபலனை விரும்புகிறவர்கள் அப்பலனை அனுபவிப்பதற்காகக் காலம் வந்தபோது தம் சரீரத்தை யிழந்து சொர்க்கம் போகிறார்கள். அவ்விடத்திலும் அவர்கள் மரணத்தைக் கடப்பதில்லை. சரீரம் உள்ள பிராணிகள் பிரமஞானத்தை அடையச் சக்தியற்று உலகபோக சம்பந்தத்தால் ஜனனவசப்பட்டுக் கீழும் மேலுமாகச் சுழல்கின்றன. சுபாவத்திலேயே ஆசையுள்ள மனிதர்கள் அசத்தியத்தை அனுசரிப்பதே அவர்களுடைய இந்திரியங்கள் தவறானமார்க்கத்தில் பிரவேசிக்கிறதற்குக்காரணமாகின்றது. அசத்தியத்தை அனுசரிப்பதால் இடைவிடாமல் வருத்தப்பட்ட ஆன்மா அதிக பழக்கமானதையே அனுசரிக்கின்றது. அதையே நினைக்கின்றது. தன்னைச் சூழ்ந்திருக்கிற உலக இன்பங்களையே சேவிக்கின்றது. போகத்தை விரும்புவதே மரணமாய் மனிதனைக் கொல்கின்றது. மதமும் கோபமும் அதை வேகமாய்ப் பின்தொடர்ந்து வருகின்றன. போக இச்சை, காமம், கோபம் இந்த மூன்றும் மூட மனிதர்களுக்கு மரணத்தை உண்டாக்குகின்றன. தம் ஆத்மாவை அடைந்தவர்கள் அடக்கமுள்ளவர்களாய் மரணத்துக்குத் தப்புகிறார்கள். தன்னை ஜயித்தவன் துன்பத்துக்கிடமான ஆசையின் தூண்டுதலால் வருந்தாமல் பிரமஞானத்தை அடைந்து, அதன் உதவியால் இவற்றை வெறுத்து ஒதுக்கிக் கொன்றுவிடுகிறான். இப்படி ஆசையை அழிக்கிற ஞானியை அஞ்ஞானம் சொரூபத்துடன் வந்து விழுங்குவதில்லை. ஆசையை அடைகிறவன் ஆசையுடன் அழிந்து போகிறான். ஆசையை ஒழிக்கிறவன் சகல துக்கங்களையும் விட்டு விலகுகிறான். உண்மையில் ஆசையே அஞ்ஞானமும் இருளும் நரகமுமாம். ஏனென்றால் அதனால் ஆளப்பட்ட மனிதன் அறிவை யிழக்கிறான். மதுவால் மயக்கமடைந்த மனிதர்கள் தெருவில் நடக்கும்போது பள்ளங்களில் இடறி விழுகிறார்கள். அதுபோல ஆசை

யினல் அநித்தியமான இன்பங்களை விரும்பி மனிதர்கள் மரணத்தை அடைகிறார்கள். கலக்கமும் ஆசையுமில்லாத மனிதனை மரணம் என்ன செய்யும்? வைக்கோலாற் செய்யப்பட்ட புலியைப்போல மரணம் அவனுக்கு அச்சத்தை உண்டாக்குவதில்லை. ஆகையால் அஞ்ஞான சொரூபமான ஆசையை அழிக்கவேண்டும். அரசனே! உமது சரீரத்திலிருக்கிற ஆத்மா கோபம், பேராசை, அஞ்ஞானம் இவைகளால் நிறைந்திருக்கிறது. அதுவே மரணமாம். இப்படி மரணம் உண்டாகிறதென்பதை அறிந்து ஞானத்தில் விசுவாசம் வைத்துள்ளவன் மரணத்துக்குப் பயப்படமாட்டான். மரணவசப் பட்டபோது நிச்சயமாகவே சரீரம் அழிகிறது. ஞானத்தின் வசப்பட்ட போது மரணம் இல்லாமற் போகிறது." என்றார்.

திருதராஷ்டிரன், "முனிவரே! யாகத்தாலும், ஜபத்தாலும் அடையப் படுகிற பரிசுத்தமான நித்திய உலகத்தைப் பெறுவதே பந்த ஒழிவாமென்று வேதங் கூறுகின்றதே. இதை அறிந்து கற்றவர்கள் தர்மத்தைத் துணையாகக் கொண்டு ஏன் அடையக்கூடாது?" என்று கேட்டான்.

முனிவர், "அரசனே! ஞானமில்லாதவன் நீர் சொன்ன வழியில் நடக்கிறான். சொர்க்கவாழ்வும், பந்த ஒழிவும் இவ்விடத்திலேயே யிருக்கின்றன வென்று வேதங்கள் கூறுகின்றன. ஜடசரீரத்தைத் தான் என்று எண்ணுகிறவன் ஆசையை ஒழித்தானானால் உடனே பந்தம் ஒழிகிறது. ஆசையை விடாமல் மோட்சத்தையடைய விரும்புகிறவன் முன்குறித்த மார்க்கத்தில் நடந்து, தான் ஒருதரம் நடந்த மார்க்கத்தில் மறுபடியும் திரும்பாமல் வெகு ஜாக்கிரதையாய் நடந்துசெல்லவேண்டும்." என்றார்.

அரசன், "பிறவாதவனும் புராதனனுமான அவனை ஏவுகிறவன் யார்? எல்லாவற்றிலும் பிரவேசித்திருக்கிற அவனுடைய செய்கை என்ன? முனிவரே! இவைகளை உண்மையாக எனக்குச் சொல்லவேண்டும்." என்றான்.

முனிவர், "அரசனே! மாறுபட்ட இவ்விரண்டையும் துணிந்து சொல்வதில் பெரிய ஆக்ஷேபனை யிருக்கின்றது. ஜீவாத்மாக்கள் எப்போதும் குணங்களின் சேர்க்கையால் உண்டாகின்றன. அவற்றின் உண்மையான தத்துவமோ குணங்களற்றது. ஆகையால் இந்தத் தோற்றமானது பிறப்பில்லாததும் அநாதியானதுமான ஆத்மாவின் பிரதானத்துவத்தைக் குறைக்கமாட்டாது. மனிதர்களும் குணக்கலப்பினாலேயே பிறந்தவர்கள். தோன்றுவன வெல்லாம் நித்தியமான ஆத்மாவைத்தவிர வேறல்ல. உண்மையில் பரமாத்மாவே பிரபஞ்சரூபமாகத் தோன்றியது. இந்தச் சக்தியைப் பரமாத்மாவுக்கு இலக்கணமாகவே வேதம் கூறுகின்றது. இந்தச் சக்தியையும், அதை உடையவனையும் துணிந்து கூறுவதற்கு வேதமே காரணமாம்." என்றார்.

அரசன்,—"இவ்வுலகிற் சிலர் தர்மத்தை அனுஷ்டிக்கிறார்கள். சிலர் தர்மத்தைவிட்டுச் சந்நியாச யோகத்தை அனுஷ்டிக்கிறார்கள். தர்மம் பாபத்தை அழிக்கும் சக்தியுடையதா? அல்லது பாபம் தர்மத்தை அழிக்கும் சக்தி உடையதா? இவற்றை எனக்குச் சொல்லவேண்டும்." என்றான்.

முனிவர்,—"பந்தநீக்கவிஷயத்தில் தர்மத்தையும் சந்நியாசத்தையும் அனுஷ்டிக்கவேண்டும். இவ்விரண்டும் மோட்சத்துக்குச் சரியான வழிகளாகும். அறிவுள்ளவன் ஞானத்தினாலேயே சித்திபெறுகிறான். ஜடவாதி தர்மத்தைச்செய்து முத்திபெறுகிறான். அவனே பாபத்தையும் செய்கிறான். நிலையற்ற புண்ணியபாபங்களைச்செய்து அவற்றின் பயனாகச் சொர்க்கநரகங்களை அனுபவிக்கிறான். கர்மத்தைச் செய்கிறமனிதன் பூர்வஜன்மபுண்ணியபாபங்களுக்குத் தக்கபடி மறுபடியும் கர்மத்தையே செய்யப் பழகுகிறான். தர்மத்தைச் செய்கிற புத்திசாலியானவன் தன் புண்ணியத்தினால் பாபத்தை அழித்துவிடுகிறான். ஆகையால் புண்ணியமே பலமுடையது. அதுவே மோட்ச சித்தியைத் தருவதாம்." என்றார்.

அரசன்,—"மறு பிறப்பை அடையத்தக்க மனிதர்கள் தங்களுடைய புண்ணியபலத்தால் அடைகிற புண்ணிய உலகங்களை அவற்றின் தாரதம்மியப்படி எனக்குச் சொல்லவேண்டும். அவற்றுக்குச் சமானமான உலகங்களையும் சொல்லவேண்டும். நான் கர்மபலனைக் கேட்க விரும்பவில்லை" என்று கேட்டான்.

முனிவர்,—"மறுபடியும் பிறந்த மனிதர்கள் தங்களுடைய யோகவல்லமையால் இங்கிருந்து புறப்பட்டுப் பிரமலோகம் போவார்கள். வேதங்கூறிய யாகாதிகர்மங்களைச் செய்தவர்கள் அவற்றிற்குப்பயனாகத் தேவலோகத்தை அடைவார்கள். வேதமுணர்ந்த வேறு சிலர் வேதம் கூறிய யாகாதிகர்மங்களைச் செய்வது கடமையாகுமென்று அபிப்பிராயப்படுகிறார்கள். இவர்கள் அதிக உயர்ந்தவராக மதிக்கப்படுவதில்லை. மழைகாலத்தில் புல்லும் நாணலும் முளைப்பதுபோலப் பிராமணர்களுக்கு அன்னபானாதிகள் எங்கும் கிடைக்கின்றன. யோகியான பிராமணன் பிறரை வருத்தாமல் ஜீவிக்கலாம். அவன் பசி தாகங்களால் வருந்தவேண்டியதில்லை. ஒருவனுடைய மேன்மையை வெளிப்படுத்துவதால் பொறாமை அடைகிற இடத்தில், மேற்குறித்த இரண்டுக்கும் அசௌகரியமாயும் அபாயகரமாயும் இருக்குமானால் அவ்விடத்தில் தன் மேன்மையை வெளிப்படுத்தாமலிருப்பதே நல்லது. பிறன்பெருமையைப் பார்க்கும்போது பொறாமை அடையாமல் இருப்பவனும், பிராமணர்களுக்கும் அதிதிகளுக்கும் அன்னமிட்டுப் புசிப்பவனும் கொடுக்கிற அன்னமே சிலாக்கியமுடையதென்று தார்மீகர்களால் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. ஒரு நாயானது துன்பத்தினால் தன்மலத்தைத் தானேவிழுங்குவதுபோலத் தங்களுடைய பெருமையைத் தாங்களே சொல்லிக்கொள்ளுகிறவர்கள் தாங்கள் வாந்திசெய்ததைத் தாங்களே விழுங்குகிறார்கள். பந்துக்களுக்கு மத்தியிலிருக்கிற அறிவுள்ள பிராமணன் தன் யோகாப்பியாசத்தை அவர்கள் அறியாதபடி செய்யவேண்டுமென்று அறிவான்.

(தொடரும்) சிவானந்தசாகர யோகீஸ்வரர்.

---

உ

சிவமயம்




## எறிபத்தநாயனார் புராணத்தின் சில விசேடக் குறிப்புகள்.

(361-ம் பக்கத் தொடர்ச்சி.)

### இராசதண்டம் பிழைத் தீர்வாதும்.

ஆன்மாக்கள் அநாதியாய், எண்ணில்லாதவர்களாய், பாசத்தடையுடையவர்களாய், அதனால் தடைப்பட்ட இச்சாஞானக் கிரியைகளை யுடையவர்களாய், தம்மைப் பந்தித்த பாச சத்தி தாரதம்மியத்தால் விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என மூவகையினர்களாய், அநாதியே பதிபாச சம்பந்தத்தாலான இருவினை யுடையவர்களாய், மாயையில் வசிப்பவர்களாய் உள்ளவர்கள்.

முதல்வன் கைம்மாறு கருதாத காருண்யத்தினால், தம தருட்சத்தியினாலே ஆன்மாக்களுக்கு மாயையினின்றும் தநு கரண புவன போகங்களைத் தோற்றுவித்து, அவற்றோடு ஆன்மாக்கள் கூடிவாழுங் காலத்தில், அவர்களறிந்து ஒழுக வேண்டிய விதிகளை உணர்த்த, வேத சிவாகமங்களை அருளிச் செய்தார். அவைகளில் விதிக்கப்பட்டவை நல்வினைகள், விலக்கப்பட்டவை தீவினைகள். நல்வினை தீவினைகள் புண்ணிய பாவங்களெனப் படும். அவை ஆன்மாக்களால் ஆர்ச்சிக்கப்பட்டு ஆகாமியம், சஞ்சிதம், பிராரத்தமென மூவகைப்படும்.

சென்ற பிறப்புக்களில் செய்யப்பட்டு மாயையில் கட்டுப்பட்டிருப்பவை சஞ்சிதங்கள். தேகத்தைக் கொடுத்து எடுத்த தேகத்தில் அனுபவிக்கப்படுபவை பிராரத்தங்கள். பிராரத்தங்களை அனுபவிக்கும்போது செய்யப்படுவன ஆகாமியங்கள்.

ஆகாமியங்கள் மன வாக்குக் காயங்களினால் தேடப்படுவன. நல்வினைப் பயனாகிய இன்பத்தைச் சுவர்க்கம் முதலிய மேலுலகங்களிலும், தீவினைப் பயனாகிய துன்பத்தை நரகங்களிலும் அனுபவிக்கவேண்டும். வினைப்பயன்களை எவ்வகையினும் அனுபவித்தே தீரவேண்டும். பாவத்திற்குத் தகுந்த தண்டனைகளை விதிக்க அரசர்களுக்கும், இயமனுக்கும் அதிகாரமுண்டு.

" மண்ணுலகின் முறைபுரியா மடவரைநால் வகைத்தண்டம்
பண்ணிநெறி நடத்திடவும் பலரறியா வகைபுரிந்த
வெண்ணில்வினை விதிவழியே நுகர்விக்கு மியல்பிற்குந்
திண்ணியரா மிருதரும ருளராகச் செய்துமென" (கோயிற்புராணம்-6)

" வானவர்கோ னுரைத்திரவி மைந்தர்களி லொருவனுக்கு
ஞானவிழி நல்கிநம னற்கதியுங் கொடுத்தகற்றி
யீனமிலா வொருவனுக்கங் கிலகுமணி முடியளித்துத்
தேனகுதா ரணிவித்துத் தேவர்கடங் கைக்கொடுத்தான்." (ஷை-7)

" மற்றவருங் கொடுபோந்து வடவரைப்பால் வருவிக்கும்
பெற்றியினு லிணைந்துநாற் பெருங்கடலுட் படும்புவிக்குக்
கொற்றவனாய் மனுநாமங் கொண்டுநடத் தினனடைவே
முற்றிகழ வருமனுக்க ளொருநால்வர் முடிந்ததற்பின்." (ஷை-8)

" பிணக்கந் தன்னையும் பெற்றவர் தம்மிடைக்
கணக்கி லாரையுங் கள்வர்க டம்மையும்
வணக்கு வான்மன்னன் மற்றையர் தங்களை
யிணக்கு வானர கத்து ளியமனே." (சிவதருமோத்தரம்)

" தத்தஞ் சமயத் தகுதிநில் லாதாரை
யத்தன் சிவன்சொன்ன வாகம நூனெறி
யெத்தண்ட முஞ்செயு மறுமையி லிம்மைக்கே
மெய்த்தண்டஞ் செய்வதவ் வேந்தன் கடனே." (திருமந்திரம்)

" அரசனுஞ் செய்வதீச னருள்வழி யரும்பா வங்க
டரையுளோர் செய்யிற் றீய தண்டலின் வைத்துத் தண்டத்
துரைசெய்து தீர்ப்பன் பின்பு சொல்வழி நடப்பர் தூயோர்
நிரயமுஞ் சேரா ரந்த நிரயமுன் னீர்மை யீதாம்."
(சிவஞானசித்தியார்-சுபக்கம்-32.)

"......................... மண்டெரியிற்
காய்ச்சிச் சுடவறுக்கக் கண்ணுரிக்க நண்ணிதிய
மீய்த்துத்தாய் தந்தைதம ரின்புறுதல்—வாய்த்தநெறி
யோடியதே ரின்கீ ழுயிர்போன கன்றாலே
நீடுபெரும் பாவமின்றே நீங்குமென—நாடித்தன்
மைந்தனையு மூர்ந்தோன் வழக்கே வழக்காக
நஞ்சனைய சிந்தை நமன்றூதர்—வெஞ்சினத்தா
லல்ல லுறுத்து மருநரகங் கண்டுநிற்க
வல்ல கருணை மறம்போற்றி." (போற்றிப்பஃறொடை-50)

என்னும் பிரமாணங்களினுலும் இது துணியப்படும். புகழ்ச்சோழர் தாம் அரசனுகையினுலும், மண்ணுலகில் தமது பிழைக்குத் தக்க தண்டத்தைச் செய்வோரில்லாமையாலும், தமது பிழைக்குத் தீர்வைத் தாமே தேடிக்

கொள்ளாதுவிடின், தேகாந்தத்தில் காலதண்டத்துக் குட்படவேண்டு மாகையினாலும், தாமே தமக்குக் கழுவாயை நாடினார்.

தமது பட்டவர்த்தனத்தையும், பாகரையும் எறிபத்த நாயனாரே கொன்றாரென அறிந்த மாத்திரையே, "குழையணி காதினாருக் கன்பராங் குணத்தின் மிக்கார்—பிழைபடி னன்றிக் கொல்லார் பிழைத்ததுண் டென் றுட்கொண்டு" "இத்தனை முனியக் கெட்டே னென்கொலோ பிழை யென்றஞ்சி" "செறிந்தவர் தம்மை நீக்கி யன்பர்முன் றொழுது சென்றீ—தறிந்திலே னடியே னங்குக் கேட்டதொன் றதுதானிற்க—மறிந்தவிக் களிற் றின் குற்றம் பாகரோ டிதனைமாள—வெறிந்ததே போதுமோதா னருள் செயுமென்று" நின்றதும், நிகழ்ந்ததை எறிபத்தநாயனார் அருளக்கேட் டறிந்ததும், மனம் பதைத்து, "அங்கணரடியார் தம்மைச் செய்தவிவ் வபராதத்துக்-கிங்கிது தன்னாற் போதா தென்னையுங் கொல்லவேண்டு—மங்கல மழுவாற் கொல்கை வழக்குமன் றிதுவாமென்று—செங்கையாலுடைவாள் வாங்கிக் கொடுத்தனர்." தமது பிழைக்குப் பிராயச்சித்தத்தை நாடியே அவ்வாறு புகழ்ச்சோழர் செய்தாரெனச் சேக்கிழார் பெருமான், "செங்கையா லுடை வாள் வாங்கிக் கொடுத்தனர் தீர்வுநேர்வார்" என அருளிச்செய்திருக்கின்றார்.

மேலும் புகழ்ச்சோழர் உடைவாளை நீட்டியபோது, எறிபத்த நாயனார் அவரது அன்பிற்கு வியந்து, தம்மிடம் கொடுக்கும் வாளை வாங்காது விடின், அவர் தமதுயிரைத் தாமே துறக்கநேருமென்றஞ்சி, அதைத் தடுக்க உடைவாளை வாங்கியபோது, வாங்கிய தொண்டர் முன்பு மன்னனார் தொழுது நின்றே, யீங்கெனை வாளினாற்கொன் றென்பிழை தீர்க்கவேண்டி, யோங்கிய வுதவிசெய்யப் பெற்றன னிவர்பா லென்றே, யாங்கவ ருவந்ததும் அதனை வலியுறுத்துகின்றது.

அப்போது அரசனது மகிழ்ச்சியைக்கண்ட எறிபத்த நாயனாரும் அஞ்சி, தம்மால் பட்டத்துயானையும் பாகர்களும் இறக்கக் கண்டும் தனது பிழைக் குத் தன்னையுங் கொல்லவேண்டுமென நின்றிரங்கும் அன்பருக்குத் தீங் கிழைத்தனனே என உட்கொண்டு, அத் தீங்கைத் தீர்ப்பான், தாமும் தம துயிரை முடிக்கத் துணிந்ததும் அதனை வலி யுறுத்துகின்றது.

இதுகாறும் கூறியவாற்றால் அரச தண்டனையும் காலதண்டனையைப் போலவே பிழைத்தீர்வாகும் என அறியவேண்டும். அரசன் முதலியோர் தண்டத்துக்குப் பயந்து, பிழையை மறைத்து இப்பிறப்பில் தப்பினால், தேகாந்தத்திலே முன்செய்த பிழைகளுக்கும் அவைகளை மறைத்த பிழைக் கும் நரகத்திலே இயமனால் தண்டிக்கப்படுவார்கள். ஆகையால் தமது பிழை களுக்குத் தீர்வை நாடுகின்றவர்கள், எவ்விடத்தும் தங்கள் பிழைகளை ஒப்புக் கொண்டு, அவற்றிற்கேற்ற தண்டனையை அநுபவித்து உய்யக்கடவர்.

(தொடரும்) பஞ்சாட்சரபுரம், வாலையாநந்தம்.



# வைணவம்

## ஸ்ரீ. நடாதூர் அம்மாள் வரததேசிகர் வைபவம்.

(சென்ற தைமீ ஆனந்தபோதினித் தொகுதி 13, பகுதி 7, பக்கம் 310, 311-ல் வெளியான நடாதூரம்மாள் சரிதை மாறுபட்டிருந்தது குறித்து அதை நீக்கி உண்மைச் சரிதையை விளக்கும்பொருட்டு, நாச்சியார் கோவில் வித்வான் அபினவ ஸரஸ்வதி குருவர்ய ஸ்ரீ. உ. வே. நடாதூர் ஸ்வாமி கிருஷ்ணமாசார்யர் எழுதியது.)

ஸ்ரீய:பதியான ஸர்வேச்வரனால் மயர்வற மதி நல மருளப்பெற்ற ப்ரபன்ன குல சிகாமணியாம் ஸ்ரீ. சடகோபன் முதல் ஓராண் வழியாய் வரும், விசிஷ்டாத்வைத ஸித்தாந்தமானது ஸ்ரீ. உடையவரால் பெருகிப் பின்னுள்ள வாசார்யர்களால் பரவப்பெற்று விளங்கிவரும் நாளில் கலியின் ஸாம்ராஜ்யத்தால் ஸத்சாஸ்திரங்களும், ஸநாதன தர்மங்களும் குறையவே, அப் பிரதிபந்தகத்தைப்போக்கி ஸ்ரீ. ராமனுஜ ஸித்தாந்தத்தைத் தழைத்தோங்கி விளங்கச்செய்ய ஸங்கல்பித்து ஸ்ரீவைகுண்ட திவ்யலோகத்தில் ஸ்ரீமந்நாராயணன் தமது கைங்கர்யத்திலீடுபட்டுள்ள நித்யஸூரி சிரேஷ்டரான ஸுபத்ரரைக் குளிரக்கடாக்ஷித்துத் தம் தேஜோம்சத்தையும் பிரஸாதித்து, நம் இராமானுஜ ஸித்தாந்த ஸ்தாபனத்தால் லீலாவிபூதியாம் பூமியிலுள்ள சேதனர்களை உஜ்ஜீவிப்பிக்கும் பொருட்டு தேவராஜப் பெருமாளுக்குப் புத்திரராக அவதரிக்கும்படி கட்டளை இட்டனர்.

ஸுபத்ரரும், லக்ஷ்மீசசாஸனமாலையை சிரோபூஷணமாக வஹித்தவராய்,

க: இதிப்ரஹ்மணோநாம தேநதத்ராஞ்சிதோ ஹரி :|
தத: காஞ்சீதி விகயாதாபுரீ புண்ய விவர்த்தநீ ||

அஸ்திஹஸ்திகிரி : நாம தத்ரசைலவரோமஹான்|
விதாத்ராப்யர்ச்சிதோவிஷ்ணு : தஸ்யசைலஸ்யமூர்த்தநி ||

“நாரண நான்முகனுக்கிடந்தான்றழகாயகச்சி”

“மாமணி வண்ணனிடம் மணிமாடங்கள் சூழ்ந்தழகாயகச்சி”

என்று பாடிப்பரவப்பெற்றுப் பலவனங்களும்மலிந்து பொலிவுற்றுஸ்ரீ. ப்ரஹ்மதேவனால் பூஜிக்கப்பெற்ற ஸ்ரீ. ஹரி கோயில் கொண்டெழுந்தருளிக காக்ஷிபுரியும் காஞ்சிபுரத்திலே,

ஸ்ரீ. ஸர்வ ஜகத்காரணபூதனும் ஸர்வேச்வரனும் ஸ்ரீய: ப்பதித்வத்தாலேயன்றோ சிறப்பெய்தியது என்று அப்படிப்பட்ட லக்ஷ்மீகடாக்ஷ நோக்கத்திற்கு முக்ய பாத்ரமான ஸ்ரீவத்ஸ குலத்திலே;

சைத்ரேசித்ரோத்பவம் காஞ்ச்யாம் தேவராஜ குரோ : ஸுதம் |
ஸுபத்ராம்சம் குரூத்தம்ஸம் வாத்ஸ்யம்வரதம் ஆச்ரயே ||

என்றபடி சித்திரை மாஸம் சித்திராநக்ஷத்ரதித்தில், ஸ்ரீ. உடையவரின் பிரிய பாகிநேயரும் [பிரியமுள்ள ஸஹோதரியின் பிள்ளை], எழுபத்து நான்கு

ஆசார்ய புருஷ பீடாதிபதிகளில் ஸ்ரீ. உடையவராலேயே பகவன்னியமன புரஸ்ஸரமாகக் கிடைக்கப்பெற்ற ஸ்ரீ. பாஷ்ய பகவத் விஷயரூப உபய வேதாந்த ஸிம்ஹாஸனாதிபதியும்,

நடாம்நளின மித்யாஹு: தச்ச ஸ்ரீசபதாம்புஜம் ।
தஸ்ரிதாந்து அனுபவ: நடாதா: தேநஸாத்விகா: ||

என்பதற்கிணங்க ஸ்ரீபகவத் பாதாரவிந்தானுபவசாலிகளான பாகவதர்கள் வஸிக்கும்படி நடாதூர் அக்ரஹாரப் பிரதிஷ்டாபகருமான ஸ்ரீ நடாதூர் வரத விஷ்ணுவாசார் என்கிற ஆழ்வாரின் திருக்குமாரராகிய கதககேஸரீ என்ற பிருது நாமமுள்ள தேவராஜாசாரியருக்கு ஸத்புத்ரரத்னமாக அவதரித்தருளினர். அங்ஙனம் அவதரித்தருளவே அந்த ஸுபத்ராம்சபூதரான ஜகதாசார்யனுக்கு "வரதகுரு" என்று திருநாமம் சூட்டப்பட்டது.

இவர் காலக்கிரமத்தில் தம் பிதாவினிடம் ஸகல சாஸ்திரங்களையும் ஓதி உணர்ந்து அதிமேதாவியாய் பால்யத்திலேயே பகவத் பக்தியிலீடுபட்டு விளங்கும்பொழுது அக்காலத்தில் ஸ்ரீ விஷ்ணு சித்தாசார்யர் என்னும் எங்களாழ்வான் ஸ்ரீபாஷ்யம், பகவத் விஷயம் இவைகளை ப்ரவசனம் செய்து கொண்டிருந்தமையால் அவரைக்கொண்டும் தமது ஸத்புத்ரனுக்கு வேதாந்த சாஸ்தர விசேஷார்த்தங்களை அப்யாஸம் செய்துவைப்பது உசிதமென்ற திருவுள்ளத்துடன் தேவராஜப் பெருமாள் தமது புதல்வனைக் குளிரக்கடாக்ஷித்து, "வாரீர் என்குலமணியே, திருவெள்ளரை எங்களாழ்வான் திருக்குருகைப்பிரான்பிள்ளானருளிச்செய்த விசேஷார்த்தங்களோடு பாஷ்யாதிகளைத் தினவுகெடச் சொல்வர்; ஆகவே பக்தியுடன் அவரிடம்சென்று அதிகரியுமென்று நியமித்தார். அவ்வாறு நியமித்த பிதாவின் திருவுள்ளப்படியே வரத குருவும் அவரிடம்சென்று தம், பிதாவின் நியமனத்தை விண்ணப்பிக்க எங்களாழ்வானும் மிக்க வுகந்து நமக்கு நீ புத்ரத்வத்தை வஹித்து உதவி செய்ய வேண்டுமெனக்கூற வரதகுரு அதைத் தம் பிதாவுக்குத் தெரிவித்து அவரது நியமனத்தையும் பெற்றுவந்து அப்படியே செய்வதாக பக்தியுடன் அங்கீகரித்தனர். அங்ஙனம் அங்கீகரித்ததும், ஆழ்வான் பரமானந்த பரிதராய் இவருக்கு அருமையான ஸமஸ்த விசேஷார்த்தங்களுடன் பாஷ்யாதிகளைப் பிரஸாதித்தருளினர்.

இந்த வரதகுரு ஸ்ரீபாஷ்யப் பிரவசனம் செய்துகொண்டு வருகிற வைபவத்தையும், ஆசார்ய பக்தி கரைபுரண்டிருக்கிறபடியையும் நோக்கி எங்களாழ்வான் ஆனந்தித்து மேன்மேல் கிருபையுடன் அருமையாய்க் கடைந்தெடுத்த அமுதம்போன்ற ஸ்ரீ. உடையவர் செய்தருளின நித்யத்தில் சொன்னபடி, "பரமைகாந்தித்வமுள்ளவர்கள் உத்யேச்யர்களென்றும்,

"அந்நிஷ்டை பெற, கத்யத்தில், நிரூபித்த உபாயானுஷ்டானம் வேண்டுமென்றும்"

"அவ்வர்த்தம் தெளிகைக்காக ஸ்ரீபாஷ்ய, கீதாபாஷ்யாதிகளை அதிகரிக்க வேண்டுமென்றும்"

"ஆசார்யனைத் திருவடிதொழுது அவரால் ஆத்மபாரத்தை எம்பெருமான் திருவடிகளில் ஸமர்ப்பித்து ந்யஸ்தபரனாக வேண்டுமென்றும்"

இன்றியமையாத இவ்வித விஷயங்களை அருளிச் செய்ததுடன், இவ்வர்த்தங்களை நல்ல பாத்திரங்களில் விநியோகியுமென்றும் நியமித்தனர்.

பிறகு ஸ்ரீவிஷ்ணு சித்தராம் எங்களாழ்வானின் திருவுள்ளப்படி ஸகல கைங்கர்யங்களையும் நடத்தி புத்ரத்வத்தையும் நிறைவேற்றின பிறகு ஆசார்யாளுடைய கடாக்ஷத்தாலே மிகவும் ஞான பூரணராய் பகுவித ஸத்கிரந்தங்களைச்செய்து உபகரித்தருளி ஸ்ரீபாஷ்யம், பகவத்விஷயம் முதலிய வேதாந்தார்த்தங்களை ஸ்ரீகாஞ்சிபுரம் ஸ்ரீவரதனும் தேவப்பெருமாள் ஸந்நிதி கச்சிவாய்த்தான் மண்டபத்தில் அந்த பகவந்நியமனத்தை முன்னிட்டு, இந்த வரதகுருவின் திருவடிகளிலாச்ரயித்தவர்களான அப்புள்ளார், க்ருஷ்ணபாதர், ஸுதர்சனபட்டர் முதலிய ஸ்ரீவைஷ்ணவ லக்ஷ்மி பொலிந்தோங்கி வர்த்தித்த பல சிஷ்யர்களுக்கு மஹத்தான கோஷ்டியில் காலக்ஷேபம் ஸாதித்தருளி ஸ்ரீமல்லக்ஷ்மணயோகீந்திர ஸித்தாந்த விஜயத்வஜம்போல் விளங்கித் தமது உபந்யாஸாம்ருத தாரையால் பெருமாள் திருச்செவிக்கு பரமானந்தத்தை விளைவித்து அந்த பரிபூர்ண கிருபாகடாக்ஷம் பெற்றவராய் எழுந்தருளி யிருந்தார்.

வந்தேஹம் வரதார்யம்தம், வத்ஸாபிஜந பூஷணம் ।
பாஷ்யாம்ருதப்ரதாநாத்ய: ஸஞ்ஜீவயதிமாமபி ||

என்று இம்மஹானின் தநியனை பக்தர்கள் அநுஸந்திப்பார்கள். பின்னொரு சமயம் ஸ்ரீவரததேசிகர் தம் காலக்ஷேப கோஷ்டிக்குத் தவறாமல் தினம் வந்துகொண்டிருந்த ஸுதர்சனபட்டர் ஒருதினம் வர, கொஞ்சம் விளம்பிக்கவே அவரை எதிர்பார்த்துக் காலக்ஷேபம் ஆரம்பிக்காமலிருந்தார்.

பட்டர் தினந்தோறும் கோஷ்டியில்வந்து வணங்கி ஒருபுறமாயிருந்து மௌனமாய், பக்தியுடன் காலக்ஷேபம் கேட்டு வந்தபடியால் அவரது ஸ்வபாவத்தை அங்கு அறியாத சிலர் அவரைப் பரிஹஸித்துவிட்டுத் தாமதியாமல் காலக்ஷேபத்தைத் தொடங்குமாறு ஸ்வாமியிடம் விண்ணப்பம் செய்தனர். அவ்வாறு செய்யவே வரதகுருவும், அவரது வைபவத்தை வெளியிடத் திருவுள்ளமுள்ளவராய், அவர் வந்ததும், "பட்டரே! நெடுநாளாய் நம்மிடத்தில் கேட்ட ஸ்ரீபாஷ்ய விசேஷார்த்தங்களில் தெரிந்தவைவை எடுத்துச்சொல்லு" மென்று கிருபையோடு நியமிக்க ஸுதர்சனபட்டரும் மஹதாசார்ய நியமனத்தை ப்ராணமபுரஸ்ஸரமாக சிரஸாவஹித்து ஸ்வாமி பல தடவைகளில் ஸாதித்தருளிய விசேஷார்த்தங்களெல்லாவற்றையும் அடியேன் சிற்றறிவுக்குத்தக்கபடி கேட்டுக்கொண்டு வந்தவனாதலின், எந்த ஆவர்த்தியின் அர்த்தத்தை விண்ணப்பம் செய்வது என்று பக்தியுடன்கேட்க, ஸ்வாமியும் ஒவ்வொரு தடவையிலும் நீர் கேட்டுணர்ந்த விசேஷார்த்தங்களெல்லாவற்றையும் சொல்லுமென்று நியமித்தனர்.

அவர், தாம் தடவை தோறும் கேட்டு வந்தபடியே அவற்றை விஸ்தாரமாக உபந்யஸித்தார். அதைச் செவியேற்றருளிய ஸ்ரீவரதகுரு அத்யானந்தத்தை யடைந்தார். அத்துடன் அங்குள்ள அனைவரும் அதிசயித்து இவர் விஷயத்தில் மிகவும் ஆதரவோடிருந்தனர்.

ஸுதர்சனாசார்யர் தாம் இவ்வாறு ஸ்ரீவரதகுருவிடம் கேட்டுணர்ந்திருந்த ஸ்ரீபாஷ்ய காலக்ஷேப உபந்யாச விசேஷார்த்தங்களை பட்டோலை கொண்டு பூர்த்திசெய்து ஆசாரியனிடம் காட்டவே அதன்பெருமையை வரதகுரு கடாக்ஷித்து, கேட்டுணர்ந்த பொருளை அப்படியே பிரகாசிக்கச் செய்திருத்தலால் அதையே காரணப்பெயராக அமையுமாறு அந்தஸ்ரீகோசத்திற்கு "ச்ருதப்பிரகாசிகை" என்று திருநாமமிட்டு அதைப்பிரவசனம் செய்து வரும்படிக்கும் நியமித்தருளினார். (தொடரும்.)






## ஆத்திசூடி உதாரணக் கதைகள்.

(364-ம் பக்கத் தொடர்ச்சி.)

### "சக்கர நெறிநில்"

"**சக்கரநெறி**—(அரசனுடைய கட்டளையாகிய) சக்கரத்தின் வழிகளிலே, (அதாவது சக்கரம் செல்லுகின்ற மார்க்கத்திலேயே), **நில்**—(மனிதனே! நீ அடங்கி) நிற்பாயாக, (அதாவது மன்னனுடைய கட்டளைக்கு நீ அடங்கிநட)" என்பது இதன்பொருள்.

கடவுளுக்கு உலகத்தை ஆக்கவும் அழிக்கவும் எவ்வாறு வல்லமையுண்டோ அவ்வாறே ஒருநாட்டை ஆளும் அரசனுக்கும் அந்நாட்டு மக்களை ஆக்குவதற்கும், அழித்துவிடுதற்கும் திறமையுண்டு. அவன் ஒருவர்மீது கோபங்கொண்டால் அவரை அழித்துவிடுவான்; ஒருவரிடத்தே அன்பு செலுத்தினால் அவரைப் பல நன்மைகளையடையச்செய்வான். ஆதலின் நலம் பெற்று வாழவிரும்புவோர் அவனுக்குக் கோபமுண்டாகாதபடி அவன் கட்டளைக்கடங்கி நடத்தல் வேண்டும். அவ்வாறு நடவாதவர் அழிந்துபோவது திண்ணம். அரசனுக் கடங்காமலிருந்து கெட்டோர் பலருண்டு; அவர்களுள் ஒருவரின் கதையை இங்குச் சுருக்கமாக எழுதிக் காட்டுவாம்:—

ஒருநாட்டை ஆண்டுவந்த அரசனுடைய ஆளுகைக்குட்பட்ட கிராமமொன்றிருந்தது. அதில் இருந்த குடிகளெல்லோரும் மிகவும் நல்லவர்கள்; அரசன்மீது விசுவாசமுடையவர்கள். அவர்கள் அவ்வாறு மன்னனிடத்து நேயம் பாராட்டி வந்தபடியால், அரசனும் அவர்கள்மீது மிக்க அன்புடையவனாய் அவர்களுக்கு வேண்டிய பற்பல உதவிகளைச் செய்துவந்தான். அக்குடித்தனக்காரர்கள் எவ்வித குறைவுமின்றி மனக்களிப்புடன் வாழ்ந்து வந்தார்கள்.

அப்படி வாழ்ந்துவருங்காலத்தில், அவ்வூர்ப் பெரிய குடித்தனக்காரருக்கு ஒரு மகன் பிறந்தான். அவன் பதினாறு வயதடைந்தவுடனே அவனுடைய தகப்பனார் இறந்துவிட்டார். குடும்பப் பொறுப்பை அந்த வாலிபன் தாங்கினான். ஆனால், அவனுக்கு உலக இயற்கை சிறிதும் தெரியாது. அதனால் அவன் யார் எதைச் சொன்னபோதிலும் அதை ஏற்றுக்கொள்ளாமல் மறுத்துத் தன் புத்திக்குத் தோன்றும் காரியங்களையே செய்துகொண்டு வந்தான். அவனுக்கு நல்ல காரியமும் தெரியாது, கெட்ட காரியமும் தெரியாது, செய்யத்தக்கதும் தெரியாது, செய்யத்தகாததும் தெரியாது. அவன் இத்தகைய குணங்களுடன் ஒரு நூதன மனிதனாய் அந்த வாழ்ந்துவருங் காலத்தில், அரசனுடைய காரியஸ்தர்கள், அந்தக் கிராமத்தின் குடிகளிடம் வரி வசூலிக்க வந்தார்கள். எல்லோரும் தங்கள் தங்கள் வரியை அவர்களிடம் செலுத்திவிட்டார்கள். அந்த வாலிபன் மாத்திரம், "அரசருக்கு வரி எதற்காகக் கொடுக்கவேண்டும்? கடவுளால் படைக்கப்பட்ட பூமியில் நாம் பயிரிடுகிறோம். கடவுள் மழைபெய்யச் செய்கிறார்; மழையினால் பயிர் விளைகிறது; அதனால் நாம் பிழைக்கிறோம்; அரசர் நம் பிழைப்புக்கு என்ன

உதவி செய்கிறார்? கடவுளுடைய உதவிபெற்று நம் சொந்த உழைப்பைக் கொண்டு நாம் வாழ்வதற்கு அரசர் நம்மிடம் வரிவாங்குவது நியாயமில்லை; ஆதலால், நான் வரிச் செலுத்தமாட்டேன்" என்று தன்னுடைய தர்க்கபுத்திக்குத் தகுந்தபடி முரட்டுநீதி பேசினான். உத்தியோகஸ்தர்கள் வரிக்காக அவனுடைய சொத்துக்களை எடுத்துக்கொண்டுபோக ஆரம்பித்தார்கள். அந்த வாலிபன் அவர்களைத் தடுத்து அடித்துக் கலகஞ் செயதான். வேலைக்காரர்கள் அரசனிடம்போய் அந்த வாலிபனுடைய செய்கையைத் தெரிவித்தார்கள். அரசன், "அவனை எவ்விததுன்பத்திற்கும் உட்படுத்தவேண்டாம்; அவனிடம் வரிக் கேட்க வேண்டாம்; அவன் நம்முடைய ஆளுகைக்குட்படாதவன் என்பதையும், இனி நாம் அவனைப்பற்றிய எதையும் கவனிக்க மாட்டோம் என்பதையும் விளம்பரமூலமாக எங்கும் தெரிவித்துவிடுங்கள்" என்று வேலைக்காரருக்குக் கட்டளையிட்டான். அவர்கள், அவ்வாறே அக் கட்டளையை நிறைவேற்றினார்கள்.

அந்த விளம்பரம் வெளியான மறுநாளே சில போக்கிரிகள் சேர்ந்து, "நாம் அந்தப் பெரிய குடித்தனக்காரர்மகன் வீட்டில் என்ன கெடுதி செய்தாலும் இனிக் கேட்பாரில்லை; நாம் அவனுடைய பொருள்களை வேண்டிய மட்டும் கொள்ளையடிக்கலாம்" என்று துணிந்து அவனுடைய நிலங்களில் விளைந்திருந்த பலன்களையெல்லாம் கைப்பற்றிக்கொண்டு போய்விட்டார்கள். அவ்வாலிபன் அதைக்கண்டு, "இஃதென்ன கேள்விமுறையில்லாத ஊராயிருக்கிறது" என்று கதறினான். அப்போது அவ்வூரார் அவனை நோக்கி, "நீ அரசனுடைய ஆளுகைக்குக் கட்டுப்பட்டிருந்தால் இப்பேர்ப்பட்ட போக்கிரிகள் உன்னிடம் வரமாட்டார்கள்; ஒருசமயம் வந்தாலும் அதிகாரிகள் அவர்களை அடக்கிவிடுவார்கள்" என்று சொன்னார்கள். அதைக் கேட்டும் அவன் அரசனுக்கடங்கி நடக்கவேண்டுமென்னும் எண்ணங் கொள்ளவில்லை. பின்னர்ச் சில தினங்கள் செல்வதற்குள்ளாகவே ஒருநாளிரவு, மேற்கூறிய போக்கிரிக்கூட்டத்தார் அந்த வாலிபனுடைய வீட்டிற் புகுந்து பொருள்களைக் கொள்ளையடித்தார்கள். அப்போது அவ்வீட்டு வாலிபன் மிகுந்த வீரத்துடன் அவர்களை எதிர்த்துத் தடுத்தான். அவர்கள் அவனை அடித்துக் கால் கைகளை முறித்துத் தள்ளிவிட்டு வீட்டிலொன்றுமில்லாமல் எல்லாவற்றையும் வாரிக்கொண்டு போய்விட்டார்கள். வாலிபன் தெருத்திண்ணையில் உட்கார்ந்து அழுதுகொண்டிருந்தான். அவனுடைய நிலைமையைப்பார்த்த அவ்வூரார், அவனைப்பார்த்து, "நீ அரசனுடைய ஆக்ஞைக்குக் கட்டுப்படாதிருக்கும் வரையில் உனக்குத் துன்பங்கள்நேர்ந்து கொண்டேதானிருக்கும்; நீ கவலையற்று உலகத்தில் வாழுதல் முடியாது" என்று சொன்னார்கள். அதன்பிறகுதான் அரசன் ஆணைக் குட்படாமல் மனிதர் உயிர்வாழல் முடியாது என்ற உண்மை அவன் மனதிற்பட்டது. உடனே அவன், அரசனிடம் சென்று வணங்கி, "நான் செய்தது தவறு; இனி ஒழுங்காக வரிச் செலுத்துவேன்; என்னை ஆட்கொண்டருளவேண்டும்" என்று தன் குறைகளை வெளியிட்டான். உடனே அரசன், அவனுடைய பொருள்களைக் கொள்ளை யடித்தவர்களைக் கண்டுபிடித்துத் தண்டித்து அவற்றை மீட்டு அவனுக்குக் கொடுக்கும்படி அதிகாரிகளுக்குக் கட்டளையிட்டான். அவர்கள் அவ்வாறே அவற்றைச் செய்தார்கள். பின்னர் வாலிபன் கிரமமாக அரசனுடைய வரியைச் செலுத்திக்கொண்டு துன்பமற்று வாழ்ந்திருந்தான்.

(தொடரும்) செம்பூர். வீ. ஆறுமுகஞ் சேர்வை.

---




## மாதரும் குடும்பமும்.

(366-ம் பக்கத் தொடர்ச்சி)

**மா**தர்கள் உலகத்திற்கு அத்தியாவசியமானவர்கள்; அவர்கள் இல்லாவிட்டால் ஒரு காரியமும் நடைபெறாது என்று இந்த வியாசத்தின் ஆரம்பத்திலேயே கூறியுள்ளோம். அங்ஙனமாக அவர்களைத் தாழ்ந்தவர்களாக நினைப்பதற்குக் காரணம் இல்லை. (இப்படிச் சொல்வதனால் நம் தேசத்தில் உள்ள புருஷர்கள் அனைவருமே ஸ்திரீகளைத் தாழ்மையாக நினைக்கின்றார்கள் என்று சொல்வதாகக் கருதுதல் கூடாது. கற்றறிந்தவர்களாகவுள்ள பெரியோர் அங்ஙனம் நடப்பதில்லை. ஆகையால் சாதாரண ஜனங்களுக்கிடையே இவ்வழக்கம் பெரும்பாலும் காணப்படுகின்றது. ஆயினும் அவர்களுள்ளும் பலர் பெண்களுக் கடங்கியே நடக்கிறார்கள். ஆனால் அது வேறு காரணத்தால். அவர்கள் சொன்னபடி நடப்பது, உட்கார் என்றால் உட்காருவது, எழுந்திரு என்றால் எழுந்திருப்பது, இன்னும் இவைபோன்ற தகாதகாரியங்களை அவர்களுக்குப் பயந்துகொண்டு செய்கிறவர்கள் பலர் இல்லாமலில்லை. இவ்வாறிருப்பதும் கோழைத்தனம். இது ஆண்மக்களின் பலவீனத்தையும் பெண்களின் இழிவையுமே காட்டுகின்றது. இதுவும் மெச்சத் தகுந்ததல்ல.)

அநேக புருஷர்கள் பெண்களை வாயில் வந்தபடியெல்லாம் வைவதும் அடிப்பதும் உதைப்பதுமா யிருக்கின்றனர். இது எவ்வளவும் போற்றத் தகுந்ததல்ல. ஸ்திரீகளை ஆறறிவுடைய மனிதவர்க்கத்தைச் சேர்ந்தவர்களாக நினைக்காமல் 'பெண்கள் என்றால் அவர்களுக் கென்னதெரியும்' என்று சொல்லக்கூடிய நிலைமையில் நம் நாட்டு ஸ்திரீகளை வைத்திருப்பது மிக்க அவமானமாகும். புருஷர் எந்தக்காரியத்தையும் சர்வசுதந்திரமாகச் செய்யலாம். அதைப்பற்றி ஸ்திரீகள் இப்படிச் செய்யலாமா? என்று கேட்கவும் கூடாது. அவர்களுக்கு அந்தச் சுதந்திரமும் கூடாது. புருஷன் சொன்னபடி நடக்கவேண்டும் என்று இத்தகைய பலவிதமாகத் தாழ்மைப்படுத்திக் கூறுவோர் பலர் உளர். நாமறிந்த எத்தனையோ குடும்பங்களில் மாதர்கள் படும் பாடும் சிறுமையும் அல்லலும் அவமானமும் அப்பப்பா! அளவிட்டுரைக்க முடியாது. சில துஷ்டப்பெண்களு மிருக்கின்றனர். அவர்களுக்கு அப்படித்தான் வேண்டும் என்றாலும், அநேக இடங்களில் நிரபராதிகளும் இப்படியே இம்சிக்கப்படுகின்றனரே! அந்தோ! என்ன பரிதாபம்! ஒரு புருஷன் தன் மனைவியைத தவிர வேறு அன்னியமாதர்களின் சம்பந்தமுடையவனா யிருக்கலாம், அதைப்பற்றி ஸ்திரீகள் கேட்கலாகாது என்று துராக்கிருதமாகப் பல ஸ்திரீகளுடன் சம்பந்தம் வைத்துக்கொள்வது அயோக்கியத்தனமான காரியம். அந்த மனைவியின் ஸ்தானத்தில் தானிருந்து பார்க்கட்டும். இத்தகைய தீயநெறியில் ஸ்திரீகள் செல்கின்றனரெனச் சிறிது தெரிந்தவுடன் கத்தியைத் தீட்டிக்கொண்டு புறப்படும் புருஷன் தன்னடக்கையால் அவள் மனம் எங்ஙனம் புண்படும் என்பதைச் சிறிதும் கவனிப்பதில்லை. தனக்குக் கசப்பாயிருப்பது மற்றவர்களுக்கு இனிமையா யிருக்குமென்றெண்ணுவது எவ்வளவு மதியீனம். இவர்களுக்கு மனச்சாட்சி என்பது இல்லையோ.

அன்பர்களே! இத்தகைய விபசாரநெறியிற் செல்லாத ஆண்மக்கள் நம்மவரில் நூற்றிற்கு எத்தனைபேரிருப்பார்கள். மனதைத் தொட்டுப்பாருங்கள். விபசாரம் என்பது ஸ்திரீகளுக்கு மாத்திரந்தானோ உரியது. ஸ்ரீராமச்சந்திரப் பெருமான் நடந்து காட்டிய ஒழுக்கம் யாது? ஏகபத்தினி விரதத்தை நமக்கு உணர்த்தவந்த அவதாரபுருஷரன்றோ அவர்.

“வந்தெனைக் கரம் பற்றிய வைகல்வாய்
இந்தவிப் பிறவிக் கிரு மாதரைச்
சிந்தையாலும் தொடேனென்ற செவ்வரம்
தந்த வார்த்தை திருச்செவி சாற்றுவாய்”

என்று அவர் சொன்னதாக ராமகதை கூறுகின்றதே.

கோசிகமுனிவர் அரிச்சந்திரமன்னனிடம் சென்று, “இந்த என் பெண்களை மணம் புரிந்துகொள்” என்றபோது அம்மகிபன் சுவாமி என் கண்ணைக் கேளுங்கள் கொடுக்கிறேன். என் ராஜ்யத்தைக் கேளுங்கள் வாழ்வுடன் தருகிறேன். இப்பெண்களை மணக்கும் வார்த்தையை என் காதிலும் போடவேண்டாம் எனக் கூறியதை யாரும் அறியாரோ!

“கண்ணை வேண்டினும் ஈகுவன் காக்கின்ற
மண்ணை வேண்டினும் வாழ்வுடன் ஈகுவன்
பண்ணை வேண்டிய இன்சொல்......குலப்
பெண்ணை வேண்டிலன் யானென்று பேசினன்”

என்று அரிச்சந்திர புராணம் கூறுவதைக் கவனியுங்கள்.

மற்றொரு விஷயம் இங்குக் கூறவேண்டியது அவசியமாகிறது. அது என்னவெனில், மாதர் தனிமையாக வெளியில் செல்லக்கூடாது என்று விதி ஏற்பட்டிருக்கின்றதல்லவா? இவ்விடத்தில் ‘ஏன் செல்லக்கூடாது?’ என்று ஒரு கேள்வியைக் கிளப்புவோம். இதற்கு விடை யாது? ‘தீங்கு நேரிடுமென்று’ என்பது விடையாம். அப்படியானால் எதனால் அல்லது யாரால் தீமை நேரிடும்? எதனாலுமல்ல, புருஷரால்தான். மற்றப் புருஷரால் ஏதாவது தீமை யுண்டாகுமென் றஞ்சியே பெண்கள் வெளியில் போகக்கூடாதென்று விதியேற்பட்டிருக்கின்றது என்பது இதனால் நன்கு தெரிகிறது. ஸதிரீகள் கெட்டவர்களென்றெண்ணும் ஆண்மக்களே! இப்பொழுது யார் நல்லவர்கள் யார் கெட்டவர்களென்று யோசித்துக் கொள்ளுங்கள். புருடர் காணும்படி பெண்கள் (யௌவன வயதுடையவர்கள்) நிற்கலாகாதென்றால் புருடரின் பார்வை விஷமத்தனமானது; அவர்களுடைய பார்வை நல்ல பார்வையா யிருப்பதில்லை. ஆதலால் அவர்கள் பார்வையிற் படலாகாது என்றல்லவோ அர்த்தமாகிறது. இன்னும் அதிகமாக விளக்கவேண்டியதில்லை. உதாரணமாக ஒரு தெருவூடே யாரேனும் சில பெண்களோ அல்லது ஒரு பெண்ணோ செல்லட்டும். அப்போது அவ்வீதியிலிருக்கும் ஆடவரிற் பெரும்பாலோருடைய பார்வையை நோக்குங்கள். இது எவ்வளவு பேடித்தனமான செய்கை. வீதியிற் செல்லும் பெண்களை இவர்கள் என் பார்க்கவேண்டும்? தம் மனைவியர் செல்கையில் பிறர் அவ்வாறு பார்க்கின் இவர்கள் மனம் எவ்வாறிருக்கும்? இத்தீச்செயல் படியாதவரிடத்தில் மாத்திரமன்று. படித்தவரிடத்தும் மிகுந்திருக்கக் காணலாம். இவ்வித துர்ச்செய்கையுடையோரிருக்கும் வரைக்கும் நாம் சிறப்படையப் போவதில்லை.

(அன்பர்களே! இவ்வாறு எழுதியதற்காக மேற்குறித்த துர்க்குணங்களையுடையார் பலர் எம்மைக் கோபிப்பர் என்பது நமக்குத் தெரியும். இருப்பி

னும் அவர்களுடைய கோபத்திற்கஞ்சி நாம் உண்மையை—நீதியை—எடுத்துரைக்காம லிருக்க முடியாது. எனினும் கற்றறிந்த பெரியோர் இதைக் கண்டு களிப்பர் என்பதில் ஐயமின்று.)

(தொடரும்.) பூ. ஸ்ரீநிவாசன், சித்தூர்.




## "வணிக நீதிகள்"

1. பரதகண்டம் பாங்குறுமாறு பகவனைப் பன்முறை போற்று.
2. உள்ளதைக் கொண்டு நல்லதென மனமகிழ்ந்திரு.
3. சினமென்பதே சிறிதுமின்றிச் சாந்த மனத்தினனாயிரு.
4. வியாபாரத்திற்குக் கல்வியே மிகவும் இன்றியமையாதது என அறி.
5. அதிக சீக்கிரத்தில் உன்னத பதவி யடையவேண்டுமென்று பேராசை கொள்ளாதே.
6. அண்டை அயலார்களை விரோதித்துக் கொள்ளாதே.
7. கணக்கு முதலிய எழுத்து வேலைகளில் உன்னுடைய முழுமனதையும் செலுத்து.
8. எழுதியதை நன்றாக இரண்டு மூன்று முறை பார்த்துப் பிழையின்றித் திருத்து.
9. உன்னை நாடி வருபவர்களை மிகவும் மரியாதையாக நடத்து.
10. சிறு குழந்தைகளை யேமாற்றுந் தொழிலை விட்டுவிடு.
11. 'வரவுக்குத் தகுந்த செலவுசெய்' என்னும் முதுமொழியை நன்றாய் எண்ணு.
12. பிச்சைக்காரர்களிடம் சண்டைசெய்து அவர்களுடைய சாபத்தை ஏற்றுக்கொள்ளாதே.
13. போட்டி வியாபாரத்தைக் கனவிலுங் கருதாதே.
14. வயிற்றிற்கும் சரியாய் உண்ணாமல் பொருளைச் சேர்த்துவைக்காதே.
15. முதியோர்கள் எவற்றைக் கெட்டவை என்று கருதுகின்றார்களோ அவற்றை விட்டுவிடு.
16. உன் காரியங்களில் மிகவும் பொறுமையாயிரு.
17. பொருளை வீண் விரய மாக்காதே.
18. உன் குமாஸ்தா (Clerk) அல்லது சம்பள ஆட்களிடம் அதிக ஜாக்கிரதையாயிரு.
19. நீ பிரவேசிக்குங் காரியங்களில் வெற்றிபெறும்படி நட.
20. வியாபார சம்பந்தமான விஷயங்களை வெளியாக்கும் (ஆனந்தபோதினிபோன்ற) பத்திரிகைகளை வரவழைத்துப்படி.

K. S, வீராசாமி செட்டியார், செவிந்திபாளையம்.

*




## நெல் சாகுபடி.

**விதை விதைத்தல்:**—நெல் சாகுபடியில் முதல் முதல் செய்யும் வேலை விதை விதைத்தல். விதை விதைப்பதற்கு நாற்றங்கால் எருவிட்டுப் பண்பட உழுது மேடு பள்ளமில்லாமல் சமனாக இருக்கவேண்டும். பிறகு நாற்றங்காலில் விதைக்க வேண்டிய விதையின் அளவைத் தீர்மானிக்க வேண்டும். ஒரு ஏக்கர் பூமியில் ஒற்றை நாற்று நடவு நடவேண்டுமானால் ஏழு செண்டு விஸ்தீரணம் உள்ள நாற்றங் காலில் ஏழு பட்டணம் படி நெல் விதைத்தால் போதும். குத்துக்குத்தாக நடவேண்டுமானால் முப்பதுபடி விதைக்குக் குறையலாகாது. தவிர விதைக்கப் போகும் நெல்லின் ஜாதியையும், வயதையும் கவனித்துப் பருவ காலங்களில் விதை விதைக்கவேண்டும்.

**எரு விடுதல்:**—பயிர் வளர்வதற்குத் தழைச்சத்து, Nitrogen), தானியச்சத்து (Phosphoric acid), சாம்பல் காரம் (Potash) ஆகிய மூன்று உணவுப் பொருள்களும் அவசியம். ஆதலால் நிலத்தில் எந்தச் சத்துக் குறைகிறதோ அந்தச் சத்துள்ள எருவை இடவேண்டும். சாதாரணமாகச் சாம்பல் காரம் எல்லாப் பூமிகளிலும் இருக்கிறது. மாட்டு எருவையும், பசுந்தான் (கொளிஞ்சி, தக்கைப்பூண்டு) எருக்களையும் உபயோகித்தால் தழைச்சத்து அதிகரிக்கும். எலும்புச்சத்துள்ள சூப்பர்பாஸ்பேட்டை (Superphosphate) உபயோகித்தால் தானியசத்து அதிகரிக்கும்.

**உழுது பண்படுத்துதல்:**—பயிரிடும் நிலத்தை நன்றாக உழுது மேடு பள்ளமில்லாமல் பரம்படித்துப் பக்குவப் படுத்தவேண்டும்.

**நாற்று நடுதல்:**—நாற்றங் காலில் விதைத்திருக்கும் நெல் தினுசின் வயதைக் கவனித்து அது எத்தனை மாதப் பயிரோ அத்தனை வாரங்கள் கழித்து நாற்றைப் பறிக்க வேண்டும். நாற்றைச் சாயாமல் சரியாக நடவேண்டும். ஒரு நாற்றுக்கும் மற்றொரு நாற்றுக்கும் மத்தியில் உள்ள தூரம் நிலத்தின் வளத்தைப் பொறுத்தது. இடையில் சாதாரணமாக ஆறு அங்குல இடம் விடலாம். கேவலமான நிலங்களில் சற்று நெருக்கமாகவும், நல்ல நிலங்களில் சற்று அதிக தூரத்திலும் நடலாம்.

**தண்ணீர் பாய்ச்சுதல்:**—பயிருக்கு வேண்டிய அளவு தண்ணீரைப் பாய்ச்சிக் கட்டிவைப்பதே சாதாரண வழக்கமாக இருக்கிறது. இதைவிட ஒருமுறை தண்ணீர் பாய்ச்சிய பிறகு மறுமுறை பாய்ச்சுவதற்குள் நிலத்தின் மேல் பரப்பு சிறிது வெடிப்புக்காண்பது நல்லது.

**களை எடுத்தல்:**—நெல் பயிருடன் புல்பூண்டு செடிகள் முளைத்துச் செழித்து வளர ஆரம்பிக்கும். அவைகளை ஏற்ற காலங்களில் களைந்து விடாவிடில் அவை நிலத்தின் சத்தைக் குறைத்துப் பயிரை நன்றாக வளர விடா.

**அறுவடை செய்தல்:**—பயிர்கள் நன்றாக வளர்ந்து கதிர்விட்டு மணி பழுத்துச் சாய்ந்து கிடக்கும் சமயமே அறுவடைக்கு ஏற்றகாலம். அக்காலத்தில் கதிரைப் பக்குவமாக அறுத்து அரி அரியாகப் போடவேண்டும். பிறகு அரிகளைச் சுமைகட்டிக் களத்தில் கொண்டுவந்து நன்றாக அடித்து வைக்

கோலைப் போர் போட்டுக்கொண்டு, நெல்லைத் தூற்றிப் பதர்போக்கி மணியை எடுத்துக்கொள்ளவேண்டும்.

**விதை பொறுக்குதல்:**—"தகப்பனைப் போல் தனயன்,' என்னும் முதுமொழி ஜீவ வர்க்கங்களுக்கு எவ்வளவு பொருத்தமாயுள்ளதோ அவ்வளவு தாவரவர்க்கங்களுக்கும் பொருந்தியுள்ளது. ஆதலால் சாகுபடிக்குச் சிறந்த விதையே நிரம்ப முக்கியமானது. நன்றாய் வளர்ந்ததும், நோய், நீர்ச் சாவி, பதர் இல்லாததும், பயிரிட்ட ஜாதி நெல்லின் குணங்கள் பூராவும் சரியாய் அமைந்து நெருங்கி மணி பிடித்ததுமான கதிரைப் பார்த்து அறுத்து அடித்துப் பதர்போக்கி வைத்துக்கொள்ள வேண்டும்.

ச. விஸ்வநாதன், திருவானைக்கா.

## சில சுகாதார மொழிகள்.

1. சுத்தா காயம் சுகத்தைக் கொடுக்கும்.
2. மனையி னருகே மலசலங் கழியேல்.
3. மேட்டு நிலத்தில் வீட்டைக் கட்டு.
4. அழுகற் பண்டம் அப்பா லெறிக.
5. பலபே ரிடையே படுத்துறங் காதே.
6. படுக்கு மறையில் பலபொருள் பரப்பேல்.
7. நித்தமும் வீட்டைச் சுத்த மாக்கு.
8. திறந்த வெளியில் தினமு முலாவு.
9. வாயு சுருங்கில் வாழ்வு சுருங்கும்.
10. நிர்மல நீரையே நிதமும் பருகு.
11. கள்சா ராயங் களைவிரும் பாதே.
12. காப்பிதே நீரைக் கனவிலுங் கருதேல்.
13. ஆற்று நீரை அசுத்தம் செய்யேல்.
14. குடிநீர்க் குளத்தில் குளித்தல் கூடா.
15. கால போசனம் சாலவு நன்று.
16. பசித்தா லன்றிப் புசித்தல் கூடா.
17. தினமிரு வேளை மனமுவந் துண்க.
18. ஆறிய உணவை அருந்துதல் நோய்வழி.
19. அமுத மெனினும் அளவறிந் துண்க.
20. போசன முடிவில் நீசல மருந்து.
21. கடைப்பல காரங் களை அருந் தாதே.
22. மென்று தின்றால் வெகுநாள் வாழலாம்.
23. அதிகா லைக்குளி ஆரோக்கி யந்தரும்.
24. காலை வெயிலைக் காலனென் றெண்ணு.
25. மாலை வெயிலை மருந்தென நண்ணு.
26. பகலில் துயில் கொளில் பலநோ யணுகும்.
27. உண்டதும் நூறடி உலாவுதல் நன்று.
28. உண்டி முடித்துக் கொண்டுநீ ராடேல்.
29. சலமலந் தன்னை க்ஷணமு மடக்கேல்.
30. தேகமோ டாடையைத் தினமுங் கழுவு.
31. திடம்பெற விரும்பினால் தேகப் பயிற்சிசெய்.

A. சுருளியாண்டி கௌடட, ஆசிரியன், கோம்பை.

# சைமன் கமிட்டியார்.

இதரநாடுகளில் 21 வயதுக்குமேற்பட்ட ஒவ்வொரு ஆண்மக்களும், பெண் மக்களும், ஓட்டுக் கொடுத்துச் சட்டசபை அங்கத்தினரை நியமிக்கின்றனர். அவ்வாறு நியமிக்கப்படுபவர்களில் சிலர், ஜனங்களுக்குரிய காரியங்களைக் கவனிப்பதற்கு நியமிக்கப்படுகின்றனர். அவர்கள் மந்திரிகள் என்று கூறப்படுகின்றனர். அம்மந்திரிகள், சட்டசபை அங்கத்தினர் விருப்பப்படி, அதாவது, ஜனங்களின் விருப்பப்படி காரியங்களை நடத்தவேண்டும். அவ்வாறு செய்யாவிடில் அவர்களைச் சட்டசபை அங்கத்தினர், அதாவது, ஜனங்கள் மந்திரி உத்தியோகத்திலிருந்து விலக்கிவிடுவர். அதை உத்தேசித்து மந்திரிகள், ஜனங்களின் விருப்பப்படியே காரியங்கள் நடத்தி வருகின்றனர்; அவர்கள் ஜனங்களுக்கு அடங்கினவர்கள்.

நம் நாட்டில் பத்து வருடங்களுக்கு முன், மேற்கூறியபடி மந்திரிகள் நியமிக்கப்படவில்லை. அக்காலத்தில் இங்கிலாந்து மன்னர், நம் நாட்டில் ஒவ்வொரு மாகாணத்திலும் ஆங்கிலேயர் சிலரையும், நம் நாட்டவர் சிலரையும் ஜனங்களுக்குரிய காரியங்களைக் கவனிப்பதற்கு நியமித்தார். அவர்கள் (எக்ஸிக்கியூட்டிவ் கவுன்ஸில் மெம்பர்ஸ்) காரிய நிர்வாக அதிபதிகள் என்று கூறப்பட்டு வந்தார்கள். அவர்கள், தங்களிஷ்டப்படி காரியங்களை நடத்தி வந்தனர். அவர்கள், ஜனங்களுக்கு அடங்கினவர்களல்லர்; ஜனங்களின் விருப்பப்படி அவர்கள் காரியம் நடத்தவில்லை. ஆதலால், நம்நாட்டு ஜனங்கள், இதரநாடுகளில் நிகழ்வதுபோல், நம் நாட்டிலும் ஜனங்களே சட்டசபை அங்கத்தினரைத் தேர்ந்தெடுத்து நியமித்துக்கொள்ளும்படிக்கும், அவர்களில் சிலர் மந்திரிகளாக நியமிக்கப்பட்டு ஜனங்களுக்குரிய காரியங்களைக் கவனித்து வரவும் தக்க ஏற்பாடுகள் செய்யும்படி இங்கிலாந்து அரசாங்கத்தாரைக் கேட்டுக்கொண்டனர். அதன்மேல் அவர்கள் பத்து வருடங்களுக்கு முன், ஜனங்களில் சிலர் ஓட்டுக்கொடுத்துச் சட்டசபை அங்கத்தினரை நியமிக்கும்படிக்கும், அவ்வாறு நியமிக்கப்படுபவர்களில் சிலர், மந்திரிகளாகும்படிக்கும், அந்த மந்திரிகளும், தங்களால் நியமிக்கப்படும் அதிபதிகளும் ஜனங்களுக்குரிய காரியங்களை நடத்தும்படிக்கும், மந்திரிகள் கல்வி, விவசாயம், வைத்தியம் முதலியவை சம்பந்தமான அலுவல்களையும், அதிபதிகள், நிலவரி, நீர்ப்பாய்ச்சல், ஏரி மராமத்து, போலீஸ், நியாயஸ்தல விசாரணை முதலியவை சம்பந்தமான அலுவல்களையும் கவனிக்கும்படிக்கும், இந்த இருதரத்தார்களாலும் செய்யப்படும் செலவுகளில் சில செலவுகளைப்பற்றிக் கேட்க ஜனங்களுக்கு அதிகாரமில்லாதபடிக்கும் ஏற்பாடு செய்தனர். இத்தகைய ஏற்பாட்டிற்கு ஜனங்கள் சம்மதப்படாமல், அதிபதிகள் கவனிக்கும் அலுவல்களையும் மந்திரிகள் கவனிக்கும் படிக்கும், ஒவ்வொருவிதமான செலவு விஷயத்திலும் கவனிக்க ஜனங்களுக்கு அதிகாரம் இருக்கும்படிக்கும் ஏற்பாடு செய்யும்படி இங்கிலாந்து அரசாங்கத்தாரைக் கேட்கின்றனர். அவ்விஷயமாக நம்நாட்டில் விசாரித்து, தம் அபிப்பிராயத்தைத் தெரிவிக்கும்படி இங்கிலாந்து அரசாங்கத்தார், தம் நாட்டில் சட்டசபை அங்கத்தினராயிருக்கும் கான்சர்வடிவ் கட்சி அங்கத்தினர் மூவரையும், லிபரல் கட்சி அங்கத்தினர் இருவரையும், தொழிற் கட்சி அங்கத்தினர் இருவரையும் ஒரு கமிட்டியாராக நியமித்தனர். இந்த ஏழுபேர்களில் ஒருவராகிய சைமன் என்பவர் அவர்களுக்குத் தலைவராயிருக்கிறார். இந்தக் கமிட்டியார் ஏழுபேர்களும் வெள்ளைக்காரர்களாயிருக்கிறபடியால், அவர்கள், நம் நாட்டு ஜனங்களுக்கு அனுகூலமாக அபிப்பிராயம் தெரிவிக்கமாட்டார்களென்று சந்தேகங்கொண்டு நம் நாட்டு ஜனங்கள், நம் ஜனத் தலைவர்களில்

சிலரை அக்கமிட்டியாருடன் சேர்க்கும்படி இங்கிலாந்து அரசாங்கத்தாரைக் கேட்டனர். அதற்கு அவர்கள் சம்மதிக்காமல் அக்கமிட்டியாரை இந்தியாவுக் கனுப்பிவிட்டனர். இத்தகைய அக்கமிட்டியார் சென்ற பிப்பிரவரிமீ 3உ பம்பாயில் வந்திறங்கினர். அவர்கள் தங்களுக்குச் சம்மதமானவர்களல்லர் என்பதை இங்கிலாந்து அரசாங்கத்தாருக்குத் தெரிவிக்கும் அறிகுறியாக அன்று நம் நாடு முழுவதிலும் ஜனங்கள், கடைகளையும் காரியாலயங்களையும் திறக்கவில்லை; சென்னையில் பெருங்கிளர்ச்சியும், கலகங்களும் நடந்தன.

பம்பாயில் இறங்கிய ஷை கமிட்டியார் டில்லி, கல்கத்தா, குண்டூர் முதலிய சில ஊர்களுக்குச் சென்று பிப்பிரவரிமீ 26ந்தேதி சென்னைக்கு வந்தனர். இங்குச் சில தினங்கள் தங்கிப் பிறகு தஞ்சாவூருக்கும், மதுரைக்கும் சென்றனர். அதன்மேல் அங்கிருந்து திரும்பி லாகூர் முதலிய இடங்களுக்குச் சென்றனர்.

## சென்னை அரசாங்க வரவு செலவு.

அரசாங்கத்தார், ஏப்ரல் மாதத்திலிருந்து பனிரண்டு மாதங்களை ஒரு வருடமாக பாவிக்கிறார்கள். அவர்கள், அடுத்த வருடத்தில் கிடைக்கக்கூடிய வரும்படியையும், ஏற்படக்கூடிய செலவையும் நடப்பு வருடத்தின் வரவு செலவுத் திட்டத்தோடு சட்டசபை அங்கத்தினர்களுக்கு முன்னரே உத்தேசமாகத் தெரிவிப்பர். அவர்கள் சென்ற பிப்பிரவரி மாதம் கூடிய சட்டசபைக் கூட்டத்தில் அதைப்பற்றித் தெரிவித்ததின் விவரம் பின்வருமாறு :—

| வரவு. | | வருஷம் 1927—28 ரூபா | வருஷம் 1928—29 ரூபா |
|---|---|---|---|
| நிலவரி | ... | 7,44, 89,000 | 7,54, 19,000 |
| மதுக்கடைக் குத்தகை வசூல் | ... | 5,20, 22,000 | 5,24, 29,000 |
| கோர்ட்டுக் கட்டண வசூல் | ... | 2,51, 69,000 | 2,53, 26,000 |
| காட்டிலுள்ள மரம், தழை விற்பனை வசூல் | | 52, 64,000 | 51, 92,000 |
| பத்திரப்பதிவு கட்டண வசூல் | ... | 39, 04,000 | 35, 12,000 |
| இதர வகைகளில் வசூல் | ... | 67, 75,000 | 78, 55,000 |
| | ஆக | 16,76, 23,000 | 16,97, 33,000 |

| செலவு. | | வருஷம் 1927—28 ரூபா | வருஷம் 1928—29 ரூபா |
|---|---|---|---|
| கவர்னர், கலெக்டர் சம்பளம் முதலிய செலவு | ... | 2,31, 89,000 | 2,51, 43,000 |
| கல்வி விவகார உத்தியோகஸ்தர்கள் சம்பளம் முதலிய செலவு | ... | 2,23, 92,000 | 2,43, 07,000 |
| மராமத்துச் செலவு | ... | 1,68, 74,000 | 2,18, 37,000 |
| போலீஸ் உத்தியோகஸ்தர்கள் சம்பளம் முதலிய செலவு | ... | 1,92, 32,000 | 1,94, 55,000 |
| நியாயாதிபதிகள் சம்பளம் முதலிய செலவு | ... | 97, 34,000 | 1,00, 20,000 |
| நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான செலவு | ... | 52, 70,000 | 58, 89,000 |
| இதர வகைகளில் செலவு | ... | 5,91, 16,000 | 6,81, 02,000 |
| | ஆக | 15,58, 07,000 | 17,47, 53,000 |

## இந்திய அரசாங்க வரவு செலவு.

நடப்பு வருடத்தின் வரவு செலவு திட்டத்தோடு அடுத்த வருடத்தில் கிடைக்கக்கூடிய வரும்படியையும் ஏற்படக்கூடிய செலவையும் இந்திய அரசாங்கத்தார் சென்ற பிப்ரவரிமாதத்தில் இந்தியச் சட்டசபை அங்கத்தினர்களுக்குத் தெரியப்படுத்தினர். அவைகளின் விவரம் பின்வருமாறு:—

| வருஷம் 1927—28 | | | | வருஷம் 1928—29 | | | |
|---|---|---|---|---|---|---|---|
| வரவு | 127 கோடி | 77 லட்சம் | ரூபா | வரவு | 129 கோடி | 65 லட்சம் | ரூபா |
| செலவு | 127 ,, | 74 ,, | ,, | செலவு | 129 ,, | 60 ,, | ,, |
| மீதி தொகை | | 3 லட்சம் | ரூபா | மீதி தொகை | | 5 லட்சம் | ரூபா |

# ஆனந்தபோதினியின் பெருமை.

## வெண்பா.

1. தன்னையடைந் தோர்துயரைத் தான்தீர்த்துக் கோருமெலா
நன்னயங்க ளியாவர்க்கு நல்குமே—இந்நிலத்தில்
ஆனந்த போதினியென் றோர்ந்ததிரு நாமமுறு
ஞானமிகு பத்திரிகை நன்கு.

2. மறையவர்க்கு நீதிபெறு மன்னவர்க்கு மன்னு
நிறைகோல் வணிகருக்கு நேரா—முறைகாட்டி
மேதினியில் மற்றையர்க்கு மேன்மைதரு மானந்த
போதினிதா னெங்கும் புகுந்து.

3. தானம் தவம்பக்தி தன்னடக்கம் போதித்து
ஞானந் தனையுணர்த்தி நல்லிறைவன்—ஆனந்த
பாதஞ்சேர் மார்க்கம் பகருகின்ற வானந்த
போதினியை நீமனமே போற்று.

M. K. கோவிந்தசாமிபடையாச்சி, தொண்டைமாநத்தம்.

## ஆமோத பத்திரிகை.

**ஆனந்தபோதினி** :—இஃது, பெயர்புனைந்ததற் கேற்ப இன்பமும் பயனும் விளைவிக்கக்கூடியதாய்ச் சந்தனப்பொதியச் செந்தமிழ் முனிவனுய்ந்த தமிழ்மொழியைத் தழுவியதாய் ஒளிர்கின்றது.

நம் பரதபூமிதேவியின் முகாரவிந்தம் போன்றதும், தமிழணங்கு மகிழ்ந்து விளையாடற்குச் சிறந்த களம்போன்றதுமான சென்னை நகரினின்று உதித்து வெளியுலாவிப் பிரகாசித்து வருவது. பல சுவைகளுடன் கூடிய இப்பத்திரிகையின் வனப்பும், பத்திராதிபரின் நன்முயற்சியும், மிகப் புகழக் கூடியனவா யிருக்கின்றன.

வித்வான் அபிநவஸரஸ்வதி, குருவர்ய
நடாதூர் ஸ்வாமி கிர்ஷ்ணமாசார்யர்.
நாச்சியார் கோவில்.

# கதருடைக் கும்மி.

1. கண்ணுக் கினிதாங் கதருடையே—எங்கள்
காந்தி யுரைத்த கதருடையே
மண்ணிற் பிறந்திட்ட மானிடர்க் கென்றும்
வனப்பைத் தருநற் கதருடையே.

2. வேனிற்காலத்தில் மிகக்குளிர்ந்து பனி
மிக்க குளிர்காலத்தில் வெதும்பி
மேனிக் கிதஞ்செய்து மேதினி மீதில்
விளங்கிடு மென்றுங் கதருடையே.

3. கெட்டி நெசவாங் கதருடையே பொருட்
கேட்டைத் தவிர்க்குங் கதருடையே
கட்டிடு வோர்க்குக் கவலைகள் தீர்த்துக்
களிப்பைத் தருமே கதருடையே.

4. சற்று முறுதியில் லாப்புற நாட்டுத்
தறிநெச வுத்துணி யைப்போல
இற்று விரைவிற் கிழியாமல்நீடித்
திருந்து விளங்குங் கதருடையே.

5. அன்னிய ராடைவிற் றள்ளிக்கொள் ளும்பொரு
ளத்தனை யும்வெளிச் செல்லாமல்
நன்னல மானநம் நாட்டில் பெருகிட
நாளும் புரியுங் கதருடையே.

6. கைத்தொழி லோங்கியே ஏழை மனிதர்
கலக்க மில்லாமற் பிழைத்திடவே
எத்தினமு மவர்க் கேற்றபொருள் கொடுத்
தின்ப மளிக்குங் கதருடையே.

7. பஞ்சத்தைப் போக்குங் கதருடையே வரு
பங்கத்தை நீக்குங் கதருடையே
வஞ்ச மிகுத்திடு மன்னியர் சூதினை
மங்கிடச் செய்யுங் கதருடையே.

8. வேதனை தீர்க்குங் கதருடையே பண
மிஞ்சப் புரியுங் கதருடையே
மாதர்க்கு மாடவர் தங்களுக்குந் தினம்
மங்கள மீயுங் கதருடையே.

9. இந்திய மக்க ளடிமைத் தனத்தினின்
றென்றும் விடுபட் டிருந்திடவே
இந்த வுலகி லுதவி புரிந்திட
ஏற்றது போற்றுங் கதருடையே.

10. என்றும் சுயமரி யாதையைப் போற்றிட
எண்ணும் சகோதர சோதரிகாள்!
நன்று தருநகத ராடை புனையுங்கள்
நம்மை யுயர்த்துங் கதருடையே.

வி. ஆறுமுகஞ் சேர்வை, செப்பூர்.

# அறிஞரின் அமுதமொழிகள்.

1. The course of nature is the art of God. *Young.*
இயற்கையாக ஒரு காரியம் நிகழ்வது ஆண்டவன் செயலாகும். (எங்.)

2. Be thou as chaste as ice, as pure as snow, thou shalt not escape calumny. *Shakespeare.*
பனிக்கட்டியைப் போலவும் பனியைப்போலவும் நீங்கள் பரிசுத்தவான்களாகவும், உத்தமர்களாகவு மிருந்தபோதிலும் சிலர் உங்களை நிந்திப்பர். (ஷேக்ஸ்பியர்.)

3. To be weak is miserable. *Milton.*
மனிதர் பலஹீனமானவர்களா யிருப்பதனால் சஞ்சலமே ஏற்படும். (மில்டன்.)

4. Books cannot always please, however good; *Crabbe.*
புத்தகங்களிலுள்ள விஷயங்கள் மேலானவைகளா யிருந்தபோதிலும் அவைகளை வாசிப்பதினாலேயே ஒருவர் எக்காலத்திலும் சந்தோஷமா யிருக்கமுடியாது. (கிரேப்பி.)

5. With a smile on her lips and a tear in her eye. *Scott.*
மானிடர்க்குச் சந்தோஷமும் சஞ்சலமும் சமமாகவே ஏற்படுகின்றன. (ஸ்காட்.)

6. But woe awaits a country when
She sees the tears of bearded men. *Scott.*
ஒருவர் வருந்தும்படி நாம் ஒரு காரியம் செய்தால் நமக்குக் கெடுதலே ஏற்படும். (ஸ்காட்.)

7. The many still must labour for tbe one ! *Byron.*
ஒருவர் சௌகரியமாக வாழ்வதற்குப் பலர் உழைக்கவேண்டியவர்களா யிருக்கிறார்கள். (பைரன்.)

8. The eyes that shone
Now dimmed and gone. *Moore.*
பணக்காரர்களா யிருப்பவர்கள் ஏழைகளாவதும், ஏழைகளா யிருப்பவர்கள் பணக்காரர்களாவதும் சகஜமாகும். (மூர்.)

9. Be wise to-day; 't is madness to defer. *Young.*
ஒரு காரியத்தைச் செய்யவேண்டியதாயிருந்தால் அதை உடனே செய்யுங்கள்; அதைப் பிறகு செய்ய எண்ணங் கொள்ளாதேயுங்கள். (எங்.)

10. All men think all men mortal but themselves. *Young.*
ஒருவர், மனிதர்கள் எல்லோரும் என்றைக்கிருந்தாலும் ஒரு நாளைக்கு இறக்கவேண்டியவர்களே என்று நினைக்கிறார்; ஆனால் அவர், தாமும் ஒரு தினத்தில் இறக்கவேண்டியவரென்பதை நினைப்பதில்லை. (எங்.)

(தொடரும்)

A. P. இராமன், B. A.





# கிருஷ்ணஸிங் அல்லது துப்பறியும் சீடன்.

(379-ம் பக்கத் தொடர்ச்சி.)

ஆனந்தஸிங் மெதுவாய் அவளை நெருங்கினான்.

வீடுகளைப் பார்த்துக்கொண்டே சென்ற மனோன்மணி திடீலென்று ஒருவீட்டின் கதவைத்திறந்து அங்கிருந்த படிக்கட்டுகளி லேறிச் சென்றாள். ஆனந்தஸிங் அவள் நிழல்போல் அவள் பின்னாலேயே சென்றான். அவன் உள்ளே சென்றபோது அவள் படிக்கட்டுகளின் உச்சியிலிருந்த ஒரு கதவைத் திறந்து உள்ளே சென்றதைக் கண்டான்.

அவன் அவ்வீட்டின் வெளிப்பக்கத்தைக் கண்டதே அந்தவிடம் மொத்தமாய் உடைகள் விற்குமிடமென்று தெரிந்தது. சரசரவென்று படிக்கட்டில் ஏறிச்சென்று கதவைத் திறந்து உள்ளே சென்றபோது அது ஒரு பெரிய நீண்ட கூடமென்று தெரிந்தது. மனோன்மணி அதன் கோடியிலிருந்து வீட்டின் பின் பக்கம் இருக்கும் வீதிக்குச் செல்லும் படிக்கட்டுகளில் இறங்கிச் செல்வதைக் கண்டான்.

தான் அவசரமாய்ச் சென்றால் காவலரில் யாராவது சந்தேகப்பட்டுத் தன்னைத் தடுப்பார்கள். ஆகையால் அவன் ஏதோ நிதானமாய் ஒரு வேலையுமின்றிச் செல்பவன்போல் அக்கூடத்தைக் கடக்குமட்டும் கஷ்டத்தோடு சென்றான். இடையில் மனோன்மணி தப்பித்துக்கொண்டு போய்விடுவாள் என்று அவனுக்கு உள்ளே அச்சமே.

அவன் படிக்கட்டில் இறங்க ஆரம்பித்ததே மிக்க துரிதமாய்ச் சென்றான். அவன் அப் படிக்கட்டுகளைக்கடந்து இறங்கியதே பின்பக்கமிருக்கும் வீதியில் இறங்கினான். அங்கு சில ஆட்கள் வண்டியிலிருந்து ஏதோ சாமான் பெட்டிகளை யிறக்கிக்கொண்டிருந்தார்கள்.

ஆனந்தஸிங் அங்கு நின்று வீதியின் கீழும் மேலும் நோக்கினான். எங்கும் மனோன்மணி காணப்படவில்லை. அதன்மேல் அங்கிருந்த ஆட்களில் ஒருவனைநோக்கி, "இந்த வழியே ஒரு கன்னிகை வந்தாளை கண்டாயா?" என்றான்.

அவன் விடை யளிப்பதற்குள் அங்குநின்றிருந்த முரட்டு மனிதன் ஒருவன் ஆனந்தஸிங் அருகில்வந்து, "யாரைக் கேட்கிறாய்? ஒரு பெண் கையில் ஒரு சிறு தோற் பையை யெடுத்துக்கொண்டு இரண்டு மூன்று நிமிடங்களுக்கு முன் இவ்வழியாக வந்தாளே, இதோ இப்படிகளின் வழியாக இறங்கிவந்தாளே அவளையா கேட்கிறாய்?" என்று மிக்க நிதானத்தோடும் ஆலசியத்தோடும் கேட்டான்.

**ஆனந்:**—"அவள் எந்தப்பக்கம் சென்றாள்?" என்று துரிதமாகக் கேட்டான்.

**அம்மனிதன்:**—"அதோ அந்த வழியேசென்று பெரிய தெருவின்பக்கமாகத் திரும்பினாள்" என்றான்.

ஆனந்தஸிங் மிக்க வந்தனம் என்று கூறிவிட்டு, அவன் கூறிய திக்கிற்கு நேர்மாருன பாதையே துரிதமாகச் சென்ருன்.

வழிகாட்டிய மனிதன் மிக்க வியப்படைந்தான். அவன் உடனே கோபத்தோடு, "அந்த வழியல்ல, அந்த வழியல்ல" வென்று கூவினுன்.

ஆனந்தஸிங் அவன் பேச்சைச் சற்றும் இலட்சியம் செய்யாமல் போவதைக்கண்டதே யம்மனிதன் மிக்க கோபத்தோடு, "அட சண்டாளப்பயலே! உனக்குக் கேடுகாலமோ" என்று அவனைப் பின்தொடர்ந்து ஒடினுன்.

ஆனந்தஸிங் அவ்வாறு சென்றதன் காரணம் என்னவெனில், அம்மனிதன் வலியவந்து ஆலசியமாய்க் கூறியவிடையால், "இவன் நமக்குத் தப்பு வழி காட்டுவதற்கென்றே இங்கு நின்றுகொண்டிருந்தவன்" என்று ஒரு விஞடிக்குள் உணர்ந்துகொண்டான். அதனுல் தான் அவன் கூறிய வழிக்கு நேர்மாருகவே சென்ருன்.

ஆனந்தஸிங் அவ்வீதியின் கோடியில் சென்றதே இடதுபக்கவீதியில் மனேன்மணி மிக்க துரிதமாகச் செல்வதைக் கண்டான். அவளும் அவனைத் திரும்பிப் பார்த்துவிட்டு மிக்க திகிலடைந்த பார்வையோடு ஏறக்குறைய ஓட்டமாகவே சென்று சற்றுதூரத்திலிருந்த ஒரு வீட்டின் கதவைத் திறந்துகொண்டு உள்ளே நுழைந்துவிட்டாள்.

ஆனந்தஸிங் உடனே அவ்வீட்டை நிமிர்ந்து பார்த்தான். அது நாணயமான ஒரு ஐந்தடுக்கு மாடி வீடு. ஆனந்தஸிங் மிக்க சுறு சுறுப்போடு அந்த வழியே நுழைந்து அங்கிருந்த படிகளிலேறி ஐந்தாவது மாடிக்குச் சென்ருன். மனேன்மணி மிக்க அவசரத்தோடும் திகிலோடும் ஒடியதால் களைப்படைந்துவிட்டாள். ஐந்தாவது மாடியில் அவள் சென்றபோது அங்கிருந்த ஒருவாசற்படி திறக்கப்பட்டது. அவள் ஆத்திரத்தோடு அதில் நுழைந்ததும் அக்கதவு தட்டென்று மூடப்பட்டது; உட்பக்கம் பூட்டப்பட்டது.

ஆனந்தஸிங் பாய்ந்து சென்று கதவைப் பலமாக அழுத்தித் திறக்கவே அது பலமான கதவல்ல வாதலால் பட்டென்று திறந்துகொண்டது. அச்சமயம் பின்பக்கம் படிகளில் இருந்து ஒரு பயங்கரமான சத்தம் கேட்டது.

---

## 5—வது அத்தியாயம்.

ஆனந்தஸிங் அக்கதவைத் திறந்தும் கடைசியில் அங்கு ஒருவரையும் காணவில்லை. ஆனுல் அவன் அதைப்பற்றி யோசனைசெய்யக்கூட நேரமில்லை. ஏனெனில் அவன் அக்கன்னிகை யிங்கிருக்கிருளா வென்று சரியாய்ப் பார்ப்பதற்குள், அவனைத்துரத்திவந்த அம்முரட்டு மனிதன் அந்த அறைக்குள் வந்து கதவை மூடிக்கொண்டு தாளிட்டுவிட்டு அதன்மேல் தன் முதுகை வைத்து நின்றுகொண்டு, ஆனந்தஸிங்கை நோக்கி,

"அடே கிழப்பயலே! நீ வீதியில் பெண்களைத் துரத்தியது போதாமல் வீட்டில் வந்து கதவையுடைத்துக் கூட வீட்டிற்குள் நுழைந்தாயா! உனக்குத் தக்க புத்தி கற்பிக்கிறேன்" என்ருன்.

ஆனந்:—"ஐயா! என்னை யொன்றும் செய்யவேண்டாம்" என்று வேண்டிக்கொள்வதுபோல் அபிநயம் செய்தான்.

முரட்டுமனிதன்:—"ஒன்றும் செய்யவேண்டாமா! உன் எலும்பை நொறுக்கிவிடுகிறேன். உன் உயிருள்ளவரையில் அதை மறக்கக்கூடாதபடி செய்கிறேன்." என்ருன்.

ஆரணி. குப்புசாமி முதலியார்.



**ரெயில்வே சண்டையும் சமாதானமும்:**—ரெயிலில் ஒரு கம்பார்ட்மெண்டில் ஒரு பிராமணர் இருந்தார். அதில் மற்றொரு பிராமணர் ஏறவந்தார். உள்ளே இருந்தவர் இடமில்லையென்றார்; வந்தவர் இடமிருக்கிறது என்றார்; உள்ளேயிருந்தவர் ஏறக்கூடாது என்றார்; வந்தவர் ஏறுவேன் என்றார்; உள்ளேயிருந்தவர் முடியாது என்றார்; வந்தவர் முடியும் என்று வண்டிக்குள் நுழைந்தார்; உள்ளேயிருந்தவர், 'என்னவோய் போக்கிரித்தனமாயிருக்கிறது' என்று அவரைக் கழுத்தைப்பிடித்துத் தள்ளினார்; வந்தவர் விடுங்காணும் என்று அவரை ஒரே தள்ளாய்த் தள்ளிவிட்டு வண்டிக்குள் நுழைந்து ஒருபக்கத்தில் உட்கார்ந்துகொண்டு முறுக்காயிருந்தார். உள்ளேயிருந்தவரும் வீறாப்பொடுங்கித் தலையை இறங்கப்போட்டுக்கொண்டு ஒருபக்கத்தில் உட்கார்ந்தார். இருவரும் மூன்றாம் பேஸ்து விழுந்தவர்களைப்போல் முகத்தைச் சுளித்துக்கொண்டு ஒருவரோடொருவர் பேசாமலிருந்தார்கள். வந்தவர் பக்கத்தில் வெற்றிலை பாக்குப்பெட்டியொன்றிருந்தது. இருந்தவர் பக்கத்தில் ஆரஞ்சிப் பழக்கூடையொன்றிருந்தது. சிறிதுநேரம் சென்றபின் ஆரஞ்சிப்பழக்கூடைக்காரருக்கு வெற்றிலைபாக்குப் போட இஷ்ட முண்டாயிற்று; வெற்றிலை பாக்குப் பெட்டிக்காரருக்கு ஆரஞ்சிப்பழமொன்று எடுத்துத் தின்ன விருப்ப முண்டாயிற்று. அதனால் இருவரும் பேசிக்கொள்ள முயன்றார்கள்; கொஞ்சநேரம் வெட்கத்தால் பேசாமலிருந்தார்கள். பின்னர் ஆரஞ்சிப் பழக் கூடைக்காரர் வெற்றிலைபாக்குப் பெட்டிக்காரரை நோக்கி, "தாங்கள் கும்பகோணமோ?" என்றார். அவர், "ஆமா; நீங்கள் ஆடுதுறையோ?" என்றார். உடனே ஆரஞ்சிப்பழக் கூடைக்காரர், "தாங்கள் சுப்பையர் பிள்ளையோ?" என்று கேட்டுக்கொண்டே வெற்றிலை பாக்குப் பெட்டியை இழுத்துப் பாக்கை யெடுத்துப் போட்டு வெற்றிலையோட ஆரம்பித்தார். வெற்றிலை பாக்குப் பெட்டிக்காரரும் அவரைநோக்கி, "தாங்கள் பஞ்சுவய்யர் தம்பியோ?" என்று கேட்டுக்கொண்டே ஒரு ஆரஞ்சிப்பழத்தை எடுத்துத் தின்ன ஆரம்பித்தார். பின்னர் ஆரஞ்சிப்பழக் கூடைக்காரர் வெற்றிலைபாக்குப் பெட்டிக்காரரிடம் பேசிக்கொண்டே அப்பெட்டியைக் காலிசெய்துவிட்டார். வெற்றிலைபாக்குப் பெட்டிக்காரரும் அவரிடம் க்ஷேமம் விசாரித்துக்கொண்டே ஆரஞ்சிப் பழக்கூடையைக் காலி செய்துவிட்டார். இவர்களுடைய அவிவேகத்தை என்னென்றுரைப்பது!

**மோட்டார் விபத்தை நீக்குவதற்குப் பக்காயோசனை:**—இப்போது அடிக்கடி நேரும் மோட்டார் விபத்தால் உண்டாகும் உயிர்ச்சேதங்களை ஒழிக்க அதிகாரிகள் கூட்டங்கூடி யோசித்து ஜனங்கள் ரஸ்தாக்களில் நடக்காமலிருக்கும்படி செய்துவிட்டால் உயிர்க்கொலை நேராதென்று ஒரு தீர்மானஞ் செய்திருக்கிறார்களாம்.

**செம்பையார்.**

(1) இன்கம்டாக்ஸ் ஆபீசர் ஒருவர் தம்மிடம் கணக்குக்கொண்டு வந்த ஒரு வியாபாரியைப் பார்த்து, "கடந்த வருடம் இவ்வளவு நஷ்டம் வந்ததற்குக்காரணம் என்ன?" என வினவினாராம். அதற்கு வியாபாரி, "சென்ற வருட முழுதும் நானும் கணக்கப்பிள்ளையும் கடையை மூடிவிட்டு இன்கம்டாக்ஸ் ஆபீசுக்கு அலைந்துகொண்டிருந்ததினால் தான்" என்றானாம்.

***

(2) "கடிதம் எழுதவேண்டியது மிக முக்கியம் தான்; ஆனால் விலாசம் தெரியவில்லையே என்ன செய்வேன்" என்று ஒருவன் வருந்திக்கொண்டிருந்தானாம். அதற்கு மற்றவன், "விலாசத்தைத் தெரிவிக்கும்படி முன்னாடி ஒரு கடிதம் எழுது; விலாசம் வந்தபின் சமாசாரத்தைத் தெரிவிக்கலாம்" என்று யோசனை கூறினானாம்.

***

(3) வெற்றியெல்லாம் தன்னுடைய அறிவினால் நேர்ந்ததென்றும் தோல்வியெல்லாம் கடவுள் சித்தத்தினால் நேர்ந்ததென்றும் கூறுவதில் கைதேர்ந்தவர்கள். யார்? என்று ஒரு உபாத்தியாயர் மாணவர்களைக் கேட்டாராம். அதற்கு ஒருவன், "வக்கீல் சார்" என்றானாம். மற்றொருவன், "வைத்தியன் சார்" என்றானாம். யாருக்கு அதிக மார்க்குக் கொடுப்பது, என்பதைப்பற்றி உபாத்தியாயர் ஒருநாள் யோசித்தும் ஒருவித முடிவிற்கும் வரமுடிய வில்லையாம்.

***

(4) ஒருவன் தனக்குச் சரிசமமான பங்குகொடுக்கவில்லை யென்றும், பிரதிவாதி தன் கூடப்பிறந்தவன் என்றும் பிராது கொடுத்திருந்தானாம். அதற்குப் பிரதிவாதி, வாதியின் பிராது சுத்த மோசடியானதென்றும், அவன், தான் பிறக்கும்போதே தன் கூடப்பிறந்தவனல்லவென்றும், தான் பிறந்து சுமார் $1\frac{1}{2}$-வருடத்திற்குப் பிந்தித்தான் பிறந்திருக்க வேண்டுமென்றும் எதிர் வழக்குச் செய்தானாம்.

கி. ஆ. பெ. விசுவநாதபிள்ளை, திருச்சிராப்பள்ளி.

---

## பஞ்சாங்க அறிவிப்பு.

நம்போதினி 14-வது ஆண்டுச் சந்தாவுக்கு முன்பண மனுப்புகிறவர்கள், மேலே பஞ்சாங்கத்துக்கு இரண்டணாச்சேர்த்து அனுப்பினால், அவர்கள் பெயரை ரிஜிஸ்டர்பண்ணி வைத்துக்கொண்டு சுக்கிலவருஷ பஞ்சாங்கம் முடிந்தபின் ஒவ்வொருவருக்கும், ஒவ்வொரு பஞ்சாங்கம் அனுப்பப்படும். ப-ர்.

## புத்தக இனாம் அறிவிப்பு.

நம் ஆனந்தபோதினி 14-வது ஆண்டுச் சந்தாவுக்கு முன்பண மனுப்புகிறவர்களுக்குப் புத்தகமொன்று இனா மனுப்பப்படுமென்று முன் தெரிவித்திருக்கிறபடி முன்பண மனுப்பினால், அப்படி அனுப்புகிறவர்களெல்லோரும் அனுப்பி முடிவானபிறகு எல்லாருடைய தொகையைக்கூட்டி மொத்தம் பார்த்துக்கொண்ட பிறகுதான் அவர்களுக்கு ஒரேகாலத்தில் இனாம் புத்தகமனுப்பப்படும். ஆதலின், நண்பர்கள் அதற்குமுன் அவசரப்பட்டு அடிக்கடி அதைப்பற்றிக் கடிதமெழுதாதிருக்கும்படி கேட்டுக்கொள்கிறோம். ப-ர்.

---

# மதிப்புரை.

## முத்தேவர் சரிதை:—

[இது, சென்னை - பச்சையப்பன் உயர்தரப் பாடசாலைத் தலைமைத் தமிழ்ப் பண்டிதர்-திருவாளர். கா. ர. கோவிந்தராஜ முதலியார் அவர்களால் இயற்றப்பெற்றது. சென்னை. 305, வால்டாக்ஸ் ரோட்டு - திருவாளர். ரா. லோகநாதம் பிள்ளை அவர்களால் வெளியிடப்பட்டது. விலை அணு 10.]

திருமாலுக் கடிமைத்திறம்பூண்டு பற்பல அற்புதங்களை உலகத்தார்க்குக் காட்டி, அப்பெருமான் திருவருளால் சிறப்பெய்திய சயதேவர், நாமதேவர், ஞானதேவர் என்னும் மூன்று பெரியார்களுடைய சரிதைகளும், இதில், தெளிவாகிய இனிய தமிழில் எவர்க்கும் பயன்படுமாறு எழுதப்பட்டிருக்கின்றன. இந்நூல் பொதுவாகத் தமிழ்மக்கள் பலர்க்கும் பயன்படக்கூடியதெனினும் சிறப்பாக மாணவர்க்கு இன்றியமையாதது. கடவுள் வழிபாடு, உண்மைஞானம், ஆசிரியர் வழிபாடு முதலிய சிறந்த சீலங்களை நன்கு போதிக்கத்தக்கது.

---

## திருவெள்ளூர்ப் புராணம்:—

[இப்புராணம், கூடற்கிழார் மரபைச் சார்ந்த, அட்டாவதானம்-சொக்கலிங்கப் புலவர் அவர்களால் இயற்றப்பெற்றது. எவர்க்கும் பொருள் விளங்கத்தக்க செம்பாகமான செய்யுட்களால் அமைந்தது. விலை ரூ. 1-4-0.]

வட கொங்குநாட்டில் உள்ள 'பேளூர்' என்னும் திருவெள்ளூர்த் தல மான்மியமும், அத்தலத்தில் கோயில்கொண் டெழுந்தருளியிருக்கும் தான்தோன்றி நாதர் மகிமையும், அறம் வளர்த்த தாயார் சிறப்பும், தீர்த்த விசேஷமும், பிறவும் இதில் நன்கு விளக்கிக் காட்டப்பட்டிருக்கின்றன. 653-செய்யுட்களுள்ளன. 13-சருக்கங்கள் அடங்கியிருக்கின்றன. சேலம்-பட்டக்கார், திருவாளர். S. M. நாராயணசாமிபிள்ளை அவர்களால் இதற்கு முகவுரையொன்றெழுதப்பட்டிருக்கிறது. அதைக்கொண்டு இப்புராணத்தின் முக்கிய குறிப்புக்களையெல்லாம் உணர்ந்துகொள்ளலாம். ஆனால், இப்புராணச் செய்யுட்களுக்குப் பொழிப்புரையொன்று காணப்படுகின்றது. அஃதின்னரால் எழுதப்பட்டதென்பது விளக்கப்படாமலிருப்பது ஒருகுறை. இந்த அரிய புராணம், சேலம், திருவெள்ளூரைச்சேர்ந்த, குறிச்சி, திருவாளர்-ஆ. சிதம்பர உடையார் அவர்களால் வெளியிடப்பெற்றிருக்கிறது.

---

## ஞானசௌந்தரி அல்லது, மாற்றுந்தாய் கொடுமை:—

[திருவாளர்-ச. செல்வராஜு ரெட்டியார், பி. எ., எல். டி., அவர்களால் எழுதப்பெற்றது; பரங்கிமலை, கத்தோலிக் புத்தகவியாபாரிகள் செல்வம் அண்டு கம்பெனியாரால் வெளியிடலானது. விலை ரூ. 1—0—0]

மாற்றுந்தாயின் சூழ்ச்சிகளால் பல இடையூறுகளில் சிக்கியும் தன் கற்பைக் கைவிடாமல் தெய்வபக்தியிற் சிறந்து மேம்பாடுற்ற ஒரு பெண்மணியின் உருக்கமான சரிதை இதில் அடங்கியிருக்கிறது. இக்கதை கிறிஸ்துமத சம்பிரதாயத்துக்குப் பொருத்தமாகத் தெளிவான செந்தமிழ் நடையில் எழுதப்பெற்றிருக்கிறது. இது, எங்கும் பிரசித்திபெற்ற ஓர் உத்தமியின் சரித்திரமாதலின் எல்லோரும் வாங்கிப் படித்து இன்புறத்தக்கதாகும்.



# வர்த்தமானப்பகுதி

ஐரோப்பா கண்டத்தில் 28 தேசங்கள் அடங்கி யிருக்கின்றன. அவைகளில் 13 தேசங்களில் மன்னர் ஆட்சியும், மற்ற 15 தேசங்களில் ஜனங்கள் ஆட்சியும் நடைபெறுகின்றன.

***

ஐரோப்பாவில் 11 தேசங்களிலும், தென் அமெரிக்காவில் 17 இராஜ்யங்களிலும், ஆஸ்டிரேலியா தேசத்தில் குவின்ஸ் லண்ட் மாகாணத்திலும் தூக்குத் தண்டனை விதிக்கப்படுவதில்லை. அத்தண்டனை விதிக்கப்படுவதை நிறுத்திவிட வேண்டுமென்று இலங்கைச் சட்டசபை அங்கத்தினர்கள், தங்கள் கூட்டத்தில் சென்ற பிப்ரவரி மாதம் 2-ந் தேதி தீர்மானித்தனர்.

***

நம் நாட்டில் வழங்கும் நோட்டுகள் இங்கிலாந்தில் அச்சடிக்கப்படுகின்றன. வருகிற ஏப்ரல் மாதம் முதல் கொண்டு அவைகள் நம் நாட்டிலேயே அச்சடிக்கப்படும். அதன் பயனாக, இந்த வகையில் செலவு கொஞ்சம் குறையும்.

***

ரஷ்யா தேசத்தில் திக்கற்ற குழந்தைகள் நாளுக்குநாள் குறைந்து கொண்டுவருகின்றன. அங்கு 1921ம் ஆண்டில் அத்தகையவர் ஏழு லட்சம் பேர்கள் இருந்தனர்; சென்ற ஆண்டில் எண்பதினாயிரம் பேர்கள் இருந்தனர்; இவ்வாண்டு ஆரம்பத்தில் நாற்பதினாயிரம் பேர்கள் தாம் இருந்தனர். அடுத்த ஆண்டில் அத்தகையவர் ஒருவர்கூட அங்கு இராரென்று அபிப்பிராயம் கூறப்படுகிறது.

***

ரஷ்யாதேசத்திலுள்ள கம்யூனிஸ்ட் கட்சியார் சென்ற பத்து ஆண்டுகளாக அத்தேசத்தில் ஆட்சிபுரிந்து வருகிறார்கள். அவர்கள் ஆட்சி செய்வதுபோலவே உலகில் ஒவ்வொரு நாட்டாரும் ஆட்சி புரியவேண்டுமென்று அவர்கள் எண்ணங்கொண்டவர்களா யிருக்கிறார்கள். அவர்கள் தங்கள் நாட்டில் உள்ள அத்தகைய ஆட்சி மற்ற நாடுகளிலும் ஏற்படுவதற்கு அந்தந்தத் தேசங்களிலுள்ள கம்யூனிஸ்ட் கட்சியார் ஜனங்களுக்கு உபதேசம் செய்யத் தக்க ஏற்பாடுகளைச் செய்வதற்காக ஒவ்வொரு தேசத்திற்கு ஒவ்வொரு கமிட்டியாரை நியமித்திருக்கிறார்கள். இங்கிலாந்து தேசத்திற்குரிய கமிட்டியார் சென்ற பிப்ரவரி மாதம் கூடிய கூட்டத்தில், இங்கிலாந்தில் உள்ள கம்யூனிஸ்ட் கட்சியார், ஒரு பத்திரிகை வெளியிட வேண்டுமென்றும், அதை வெளியிடுவதற்கு ஏற்படககூடிய செலவுக்குப் பணம் தாங்கள் அளிப்பதாகவும், அந்தக் கம்யூனிஸ்ட் கட்சியார், தாங்கள் சேர்ந்திருக்கும் தொழிற்கட்சியார்கூட்டத்திலிருந்துபிரிந்து தனியான கட்சியாராக இருக்கவேண்டுமென்றும்,சட்டசபைஅங்கத்தினராக ஏற்படுவதற்குத் தங்களைச் சேர்ந்தவர்கள் பலரை முன் நிறுத்தவேண்டுமென்றும் தீர்மானித்து இவற்றை அக்கட்சியாருக்குத் தெரிவித்தார்கள். இங்கிலாந்தில் ஜனங்கள் அடுத்த வருடத்தில் சட்டசபை அங்கத்தினரை நியமிப்பர். அத்தேசத்தில் கம்யூனிஸ்ட் கட்சியாரைச் சேர்ந்தவர் ஒருவர்தாம் தற்போது சட்டசபை அங்கத்தினரா யிருக்கிறார். அவரையும் இன்னும் நான்கு பேர்களையும் அடுத்த ஆண்டில் முன நிறுத்த இக் கட்சியார் தீர்மானித்திருக்கிறார்கள். (இதைப்போல நம் நாட்டிலிருக்கும் கம்யூனிஸ்ட் கட்சியார் மூலமாகவும் நம்மவர் முன்னேற்றத்திற்கான சில முயற்சிகள் நடைபெறுமாயின் அது மெத்த அனுகூலமாயிருக்கும்)

# “ஆனந்தபோதினி” பஞ்சாங்கம்.

**விபவ௵ சித்திரை௴—கலியுகாதி 5030, சாலிவாகனம் 1851,**
**பசலி 1337—கொல்லமாண்டு 1103—ஹிஜரி 1346,**
**இங்கிலீஷ் 1928௵ ஏப்ரல்௴—மே௴**

| சித்திரை | ஏப்ரல்௴ | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 13 | வெ | அ49-38 | பூரா0-58 | பி0-58சி | வருஷப்பிறப்பு, அவமாகம் விஷு புண்ணியகாலம் |
| 2 | 14 | சனி | நவ49-38 | உத்4-13 | சித்60 | தானியம் செலவிட |
| 3 | 15 | ஞா | தச47-28 | திரு5-18 | அ5-18ம | சுபகாரியம்செய்ய, கதிரறு |
| 4 | 16 | திங் | ஏ43-20 | அவி4-25 | சித்60 | சர்வ மத்வ ஏகாதசி [க்க |
| 5 | 17 | செவ் | து37-25 | சதை1-25 பூரட்56-50 | ம56-50அ | அவமாகம் |
| 6 | 18 | புத | திர30-10 | உத்50-53 | சி50-53ம | [மாச சிவராத்திரி கரிநாள், பிரதோஷம், |
| 7 | 19 | வியா | ச●21-28 | ரேவ44-3 | சி44-3அ | சர்வத்திர அமாவாசை |
| 8 | 20 | வெ | அ12-25 | அஸ்36-45 | அ36-45சி | அவமாகம் |
| 9 | 21 | சனி | பிர3-5 துதி54-0 | ப※28-28 | சி29-28அ | வைசாகசுத்தம், கிருத்திகை, சந்திரதெரிசனம் |
| 10 | 22 | ஞா | திரி45-38 | கிரு22-40 | சித்60 | கிருத்திகை |
| 11 | 23 | திங் | சது38-5 | ரோ16-48 | அமி60 | |
| 12 | 24 | செவ் | பஞ்31-48 | மிரு12-3 | சி12-3ம | |
| 13 | 25 | புத | சஷ்27-8 | திரு8-43 | சித்60 | |
| 14 | 26 | வியா | சப்24-10 | புன6-55 | அமி60 | |
| 15 | 27 | வெ | அ22-55 | பூசம்6-50 | மர60 | |
| 16 | 28 | சனி | நவ23-15 | ஆயி8-30 | ம8-30அ | |
| 17 | 29 | ஞா | தச25-3 | மக11-35 | ம11-35சி | |
| 18 | 30 | திங் | ஏகா28-8 | பூரம்15-58 | சித்60 | |
| 19 | 1 | செவ் | து32-20 | உத்21-35 | அ21-35சி | |
| 20 | 2 | புத | திர37-38 | அஸ்28-3 | ம28-3சி | |
| 21 | 3 | வியா | சது43-23 | சித்35-30 | சி35-30அ | அக்னிநக்ஷத்ரம்-நா-24-58 |
| 22 | மே௴ 4 | வெ | ○49-38 | சுவா42-40 | சித்60 | சித்திரா, பௌர்ணமி |
| 23 | 5 | சனி | பிர56-8 | விசா50-25 | சித்60 | வைசாகபகுளம் |
| 24 | 6 | ஞா | துதி60 | அனு60 | மர60 | திருதினஸ்பிருக் [வெட்ட |
| 25 | 7 | திங் | துதி2-28 | அனு0-43 | சித்60 | மாடுவாங்க, குளம்கிணறு |
| 26 | 8 | செவ் | திரி8-23 | கேட்5-35 | ம5-35அ | சங்காஷ்ட சதுர்த்தி |
| 27 | 9 | புத | சது13-35 | மூல12-13 | ம12-13அ | வராஹ ஜயந்தி |
| 28 | 10 | வியா | பஞ்17-45 | பூரா17-50 | சித்60 | கணிதாரம்பம், கடன்தீர்[க்க, மாடுவாங்க |
| 29 | 11 | வெ | சஷ்20-25 | உத்22-5 | சி22-5ம | கதிரறுக்க, விதைவிதைக்க |
| 30 | 12 | சனி | சப்21-25 | திரு24-40 | சித60 | வியாதியஸ்தர் குளிக்க |
| 31 | 13 | ஞா | அ20-30 | அவி25-25 | ம25-25சி | ரிஷப ரவி நாழி-45-50, சாந்திர நவமி திதி |

| | | | |
|---|---|---|---|
| 4 கு-சு | சூ | ராகு | |
| செவ் | 11உ மே-புத<br>18 ,, மே-சுக்<br>20 ,, மே-குரு<br>25 ,, மீன-செ<br>26 ,, ரிஷ-புத | | |
| | சனி கேது | | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,
AT THE “ANANDA BODHINI” POWER PRESS,
15, VENKATESA MAISTRY ST., MADRAS.